# வியர்வை...

வியர்வையினால் உருவாகிறது . வேர்க்குரு. எனவே, வியர்வையை வெறுப்பதைவிட, ஷவர் டு ஷவர் கொண்டு வேர்க்குருவை எதிர்த்திடுங்கள். நறுமணமுள்ள, வியர்வையின் எதிரி இது. இதன் செயல் பிரமிக்க வைக்கும் உங்களை. எனவே, வியர்வையை ஒழித்து, வேர்க்குருவையும் ஒழிப்பீர் - ஷவர் டு ஷவர் கொண்டு.

கலோன் கூல் லாவெண்டர் மற்றும் சந்தன நறுமணங்களில் கிடைக்கிறது.




விந்தையூட்டும் வியர்வையின் எதிரி.




ஸ்ரீ
# கல்கி





1993
மே 16
மலர் : 51
இதழ் : 42
ஸ்ரீமுக
வைகாசி 3


## பிரேமதாசா இறந்தார்; பிரேமை பிழைக்குமா?

அதுலத் முதலி, தொடர்ந்து பிரேமதாசா. இலங்கை அழுகிறது; நாமும் வருந்துகிறோம்; ஸ்ரீலங்கா மக்களுக்கு அனுதாபம் தெரிவிக்கிறோம். இத்தகைய "சோதனைகளைச் சமாளித்து முன்னேறும் ஆன்ம பலம் இலங்கை ஜனநாயகத்துக்கு உண்டு" என்ற ஜெயவர்த்தனாவின் நம்பிக்கையை நாமும் எதிரொலிக்கிறோம்.

அதுலத் முதலியின் படுகொலைக்குக் காரணம், பயங்கரவாதமல்ல என்றும் அரசியல் பழிவாங்கல் நடவடிக்கை என்றும் கூறப்பட்டது. பிரேமதாசாவின் மரணமோ ராஜீவ் காந்தியின் முடிவை நினைவூட்டி, விடுதலைப் புலிகளின் வேலை என்பதை நிரூபிக்கிறது. லட்சியப் போராட்ட வீரர்களாக ஆரம்பித்து, பயங்கரவாதிகளாக மாறி விட்ட புலிகளை உலகமே கண்டிக்கிறது. நாமும் வன்மையாகக் கண்டிக்கிறோம். ஆனால் அத்துடன் நில்லாது யோசிக்கவும் வேண்டும். பயங்கரவாதமோ அரசியல் பழிவாங்கலோ, அதுலத்முதலியின் சாவு, பிரேமதாசா மரணம் இரண்டுமே வன்முறையின் வெளிப்பாடு. வாக்குவாதத்தில் நம்பிக்கை இழந்தவர்கள் மேற்கொண்ட பயங்கரவாதம்.

ஜனநாயகம் ஏன் இப்படி ஜன்மப் பகை வளர்க்க வேண்டும்? அப்படி வளர்கிறது என்றால் அது எப்படி ஜனநாயகமாகும்? காஷ்மீரில், பஞ்சாபில், ஸ்ரீபெரும்புதூரில், பம்பாயில், சமீபத்தில் கொழும்புவில்... சில அமைப்புகள் ஜனநாயகத்தில் நம்பிக்கை இழந்து, வன்முறையில் இறங்குவது ஏன்?

ஜனநாயகம் என்பது பெரும்பான்மையினரின் ஆட்சியாகத்தான் இருக்க முடியும். சிறுபான்மையினர் சகிப்புத் தன்மையை வளர்த்துக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால் அதே சமயம் ஆட்சிக்கு வரும் பெரும்பான்மையினர், சிறுபான்மையினரிடம் அன்பு காட்டி அனுதாபத்துடன் நடந்து கொள்ள வேண்டும். இந்தச் சிறுபான்மையினர் ஓர் இனத்தவர், அல்லது மதத்தவர், அல்லது பிரதேசத்தவர், அல்லது கட்சியினர் என்று எதுவாக இருந்தாலும் அன்பும் அனுதாபமும்தான் பரஸ்பர நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் வளர்க்கும். ஆனால் நடப்பது வேறாக உள்ளது. சிறுபான்மையினரின் கோரிக்கைகளில் நியாயமானவற்றைக் கூட ஆட்சியில் உள்ள பெரும்பான்மையினர் ஏற்காமல் அலட்சியப்படுத்துகின்றனர். அப்போது வன்முறைச் சிந்தனை வளர்கிறது. அதுவே ஆட்சியாளருக்கு வசதியாகி விடுகிறது. "முதலில் வன்முறையை விட்டு விட்டு வா, பேசலாம்" என்கின்றனர். இதனால் சிறுபான்மையினருக்கு மேலும் கோபம் எழ, அதிரடிப் படை, தற்கொலைப் படை எல்லாம் தயாராகிறது. கொரில்லாப் போர் முடிவில்லாமல் தொடர்கிறது.

போதாக்குறைக்கு ஜனநாயக அமைப்பிலேயே, 'எப்படியாவது தேர்தலில் வெற்றி பெற வேண்டும்' என்ற நோக்கில் குண்டர்களைக் கட்சியில் அனுமதித்து, அவர்கள் மக்கட் பிரதிநிதிகளாகவும் கணிசமான அளவில் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்! அரசியலும் சினிமாவும் வழிகாட்ட, இன்று வன்முறை, படிப்படியாக வாழ்க்கை முறையாகவே மாறி வருகிறது. அல்லாது போனால் மோனிகா செலஸ் வெற்றி பெற்றுவிடக் கூடாது என்பதற்காக அவரை ஒரு ஸ்டெஃபிகிராஃப் ரசிகர் குத்திக் கொல்ல முயற்சி செய்ய மாட்டார்!

பயங்கரவாதம் தவறுதான்; மன்னிக்க முடியாத ஒன்றுதான்; பயங்கரவாதிகளுடன் சமரசப் பேச்சே கூடாது என்ற வாதத்திலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் பயங்கரவாதத்தைப் போரிட்டு வெல்ல முடியாது என்பதும் யதார்த்த உண்மை. உலகின் பல பாகங்களில் பலமுறை நிரூபிக்கப்பட்ட உண்மை.

இதற்கு ஒரே மாற்று அன்பு மார்க்கம்தான். பழிக்குப் பழி, கொலைக்குக் கொலை என்றில்லாமல், வாதப் பிரதிவாதங்கள் மூலம், நமது அன்பையும் நல்லெண்ணத்தையும் வெளியிட்டு, பரஸ்பரம் விட்டுக் கொடுத்து, அமைதி காண்பதுதான் வழி. ஏதேனும் ஒரு தரப்பாவது நேசக்கரம் நீட்டி, பாசம் காட்ட வேண்டும். பெயரிலேயே பிரேமை இருந்தும் பிரேமதாசா விஷயத்தில் புலிகள் ரொம்பவும் ஏமாற்றம் அடைந்திருப்பதற்கான சரித்திரச் சான்றுகள் உள்ளன. சொல் ஒன்றும் செயலொன்றுமாக அவர்கள் விஷயத்தில் நடந்து கொண்டிருக்கிறார். ஆக அன்பும் பாசமும் சத்தியத்துடன் இணையும் போதுதான் வெற்றி கிட்டும்.

பயங்கரவாதத்தை அன்புமார்க்கத்தால் வெற்றிகொள்ள, காந்தி மதத்தைப் புரிந்து கொண்ட இந்தியாவாலும் புத்த மதத்தை ஏற்றுக் கொண்ட ஸ்ரீலங்காவாலும் முடியவில்லை என்றால் உலகில் வேறு யாரால்தான் வெற்றி பெற முடியும்?

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

**மெ**ட்ரோ -

சமீபகால சின்னத் திரைக் குட்டிச்சாத் தான். சகலமானவரையும் மயங்க அடித்துக் கொண்டிருக்கும் நாகபாசம்.

யோசித்துப் பார்த்தால் ஒரு நிகழ்ச்சியும் இல்லாமல், வெறும் சினிமாவைப் பல் வேறு ரூபங்களில் வழங்குவது தவிர, யாரும் பெரிய புரட்சி பண்ணி விட்டதாகத் தெரியவில்லை. அப்படியிருந்தும் அமோக ஆதரவு! மெட்ரோ தெரியாத தெற்குப் பகுதி களிலெல்லாம் டிஷ் ஆண்டெனா கொண்டா வது பார்த்து விடத் துடிக்கும் நமது மகா ஜனங்கள்!

'மெட்ரோவின் வெற்றி, அதன் நீர்க் காயுகக்குக் கேரண்ட்டி' என்று உறுதியாகச் சொல்கிறார்கள் சில தயாரிப் பாளர்கள்.



''மேலோட்டமா விமர் சிக்கறதுன்னா வெறும் ஒலி யும் - ஒலியும் மாதிரி இருக் குன்னு சொல்லலாம். ஆனால் அதைக் கூட எத்தனை இன்ட் ரஸ்டிங்கா தர்றோம்?'' என்கி றார் கிரீன் வேலஸ் டெலிவிஷ னின் இயக்குநர் எஸ். ராஜா. ''எ ன் ட ர் டெ யி ன் மென்ட்டுன்னாலே நம் மக்க ளுக்கு உடனே ஞாபகம் வர்றது சினிமா தான். மேலும் நான் ஒரு பிலிம் இன்ஸ்டி டியூட் பட்டதாரி. ஸோ, சினிமாங்கறது எனக்கு மிக நெருங்கின ஒன்று. எனவே, எனக்குத் தெரிந்த, நான் மிகவும் விரும்புகிற ஒன்றை, மக்களும் விரும்பும்படி தருவதால் என்னால் ஜெயிக்க முடிந்தது.''

✱ மாலா மணியன்

புதிதாக, வித்தியாசமாகச் செய்ய பலருக்கு ஆர்வமிருக்கிறது. ஆனால் அதற்கெல்லாம் சந்தர்ப்ப மில்லாத நெருக்கடி நிலை தற்போது அமுலிலிருப்பதாகக் கருதுகிறார்கள்.

என்ன நெருக்கடி?

புரிந்து கொள்ள வேண்டுமானால் மெட்ரோவின் பூர்வசரிதம் தெரிந்து கொள்ள வேண்டும்.

# இதுதாண்டா மெட்ரோ!

இவர் சொல்வதை நிரூபிப்பது மாதிரி (திட்டிக் கொண்டேயாகிலும்) மாய்ந்து மாய்ந்து பார்க்கத்தான் செய்கிறார்கள் மக்கள். 'அலுக்காதோ?' என்றால் 'ஜஹாங்கீர் மியூசிக் டீவி போலத்தான் இதுவும் போதை ஏற்றும் சமாசாரம்' என்பதே பதில். அன் றாட கவலைகளையெல்லாம் திரைப்படப் பாட்டு டான்ஸின் பாத கமலங்களில் சமர்ப் பித்து விட்டு உல்லாசக் கற்பனைகளிலேயே கிறங்கிக் கிடக்கலாம். பிரச்னைகளைச் சந் திப்பதற்குப் பதிலாக மூளைச் சலவை செய்து கொண்டு முடங்கிக் கிடக்கலாம். ஆனால் இது ஆரோக்கியமானதா? மக்கள் நலனில் அக்கறை கொள்ள வேண்டிய அரசின் அங்கமான தூர்தர்ஷன் இதற்கு இடம்தரலாமா?

**நி**கழ்ச்சிகளின் தரம் உயருதல் பொருட்டும், 'அள்ளக் குறையாத' வருமா னம் பொருட்டும், ஒளிபரப்புத் துறையை தனியார் மயமாக்கும் மேலைநாட்டு சித் தாந்தத்தை அனுஷ்டித்துப் பார்க்க முடிவு செய்தது தூர்தர்ஷன்.

விளைவு, இந்த



✱ நாராயணன்



✱ ரூதி



வருடத்தின் ஒரு ஜனவரி இரவில் அறிவிக்கப்பட்டது. மெட்ரோ சானல்.

நேரத்தைக் 'குத்தகை' எடுக்கும் தயாரிப்பாளர்கள் சினிமாக்காரர்களா, சீவி வியாபாரிகளா என்பது பற்றியெல்லாம் நிலையத்தார் கவலைப்படவேயில்லை. அவர்களது 'ஐடியா' ரொம்பத் தெளிவாக இருந்தது.

1. பதின்மூன்று வாரம் அல்லது இருபத்தியாறு வாரம் ஒரு தயாரிப்பாளருக்கு ஒரு நிகழ்ச்சி - அரைமணி அல்லது ஒரு மணி. அந்த நேரம் உன்னுடையது. அதில் நீ என்னவாவது பண்ணிக் கொள்.

2. எனக்கு வேண்டியது பணம். அரை மணிக்கு 54,000 ரூபாய். பணத்தைக் கட்டி விட்டு நீ ஏதும் செய்து கொள். உன் வருமானத்திற்கு ஐந்து நிமிடம் விளம்பரம் வாங்கிக் கொள்.

3. முதலில் வருகிறவர்களுக்கு முதல் வாய்ப்பு. ஏமாற்றத்தைத் தவிர்க்க, முந்திக் கொள்ளுங்கள்.

- இவைதான் மெட்ரோ சானலுக்காக தூர்தர்ஷன் வகுத்துக் கொண்ட அடிப்படை இலக்கணம்.

டீ.வி. நிலையத்தாரால் தேர்ந்தெடுக்கப்படும் தனியார் நிறுவனங்கள், முன்னதாக இரண்டு வாரங்களுக்கான 'டீவி தட்சணை'யைச் செலுத்தி, அடுத்த இரண்டு வாரங்களுக்கான தொகை முழுவதையும் 'பாங்க் கேரன்ட்டி'யாகச் செலுத்த வேண்டும். தொலைக்காட்சியில் 10 செகண்டுக்கான விளம்பரக் கட்டணம் ரூ. 5000/- மேற்படி தனியார் தயாரிப்பாளர்களுக்கு ஐந்து நிமிட விளம்பரம் மூலமாகக் கிடைப்பதில், தூர்தர்ஷனுக்குக் கொடுக்க வேண்டிய தொகை, விளம்பர ஏஜென்ஸி கமிஷன், இன்ன பிறவும் போக கிட்டத்தட்ட 50,000/- நிற்கும். இதில் தரமாக ஒரு நிகழ்ச்சி தயாரிக்க வேண்டுமென்றால் தாராளமாக 50 - 60 ஆயிரம் தண்ணீர் போல் கரையும். மிச்சம் மீதி ஒன்றும் இராது. ஆக லாபம் உறுதியாகக் கலபமான வழி, ஒளியும் - ஒலியும் ரக நிகழ்ச்சிகள்தான்!

✱ ப்ரியா

திரைப்படத் தயாரிப்பாளர்களிடமிருந்து 20 - 25 நிமிடங்களுக்கான பாடல்களை சுமாரான விலைக்கு வாங்கி அவற்றை அப்படியே ஒளிபரப்பி விடுவதன் மூலம் நஷ்டத்தைத் தவிர்ப்பதோடு மட்டுமின்றிக் கணிசமான லாபமும் கிடைக்கிறது! அப்புறம் தரம் இல்லையே என்று யார் புலம்பி என்ன பயன்?

நிகழ்ச்சிகளின் தரக்குறைவுக்கு ஒட்டு மொத்தக் காரணம் டீவி ஸ்டேஷனில் இருக்கிறவர்கள்தான் என்று 'ஆட்டம் பாம்' போடுகிறவர்கள், பிரபல தொலைக் காட்சித் தொடர் தயாரிப்பாளர் சேவந்த் சானல் நாராயணனும், பத்திரிகையாளர் ஞாநியும்.

''டீவியைப் பொறுத்தவரைக்கும் சிறப்பான தயாரிப்புகளுக்கு என்றுமே ஆதரவு கிடையாது. 'அப்ரூவல்' மட்டும் இருந்தால் போதும், எந்த புண்ணாக்கும் எடுபடும். அப்ரூவல் விஷயத்தில் லஞ்சம் புகுந்து விளையாடுகிற போது குவாலிட்டி எப்படி

✱ கண்ணாடிக் கதைகள்



# தூர்தர்ஷனின்



மெட்ரோ சம்பந்தப்பட்ட 'கசமுசா'க்கள், மற்றும் நமது சந்தேகங்கள் குறித்து 'தூர்தர்ஷனிடம்' விளக்கம் கேட்டோம். நமது 'ஸ்கட்'டும், அவர்களது 'பேட்டியாட்'டும் பின்வருவன :

"உங்கள் முதல் குற்றச்சாட்டு : முன்னறிவிப்பு ஏதுமின்றி திடீரென்று நாங்கள் மெட்ரோவை அறிமுகப்படுத்தியதாகச் சொல்லப்படுவது. இப்படியான ஒரு யோசனை சிறிது காலமாகவே இருந்து வந்ததுதான் என்றாலும் ஜனவரி 26 அன்று இத் திட்டத்தை அமுல்படுத்துவதாக முடிவெடுக்கப்பட்டது (டெல்லியில்). தயாரிப்பாளர்களுக்கு கால அவகாசம் குறைவுதான். ஆனால் நாங்கள் அவர்களுக்கு எந்த விதமான, நெருக்கடிக்கு உள்ளாக்குகிற, சட்ட திட்டங்களையும் முன்வைக்கவில்லையே?

''இரண்டாவது குற்றச்சாட்டு - பணம் விஷயம். முதலில் 80,000 ஆகச் சொல்லி பின் 54000 ஆகக் குறைத்தது. நல்லதுதானே! Of course, மெட்ராஸில் 80,000 கட்ட பலர் உடனே தயாராக இருந்தார்கள். ஆனால் மற்ற பிராந்தியங்களில் இந்தத் தொகைக்கு ஆதரவில்லாததால்தான் குறைத் தோம். இதை 'கொள்கைத் தெளிவின்மை' என்றெல்லாம் சொல்வது சரியல்ல.

''மூன்றாவது விளம்பர நேரம் குறைவு - அதனால் வருமானம் குறைவு என்பது. இதற்கு ஒரே பதில்தான். நிகழ்ச்சிகள் சிறப்பாக, ரசிப்புக்குகந்ததாக, பல்வேறு தரப்பினரையும் கவரும்படி இருக்கிறபட்சத்தில் நாங்கள் நிர்ணயித்துள்ள குறைந்தபட்ச நேரத்தையும் அதிகபட்ச தொகையையும் ஏற்கும் விளம்பரதாரர்கள் தாங்களாகவே தேடி வருவார்கள்.''

இருக்கும்? அவர்களை 'கவனிக்க'த் தெரியாத ஒரே காரணத்தினாலேயே எனது சிறந்த தொடர்கள் சிலவற்றை ஒளிபரப்பும் வாய்ப்பை நான் இழந்திருக்கிறேன். மெட்ரோவைப் பொறுத்தவரை எனக்கு பைசா லாபம் இல்லை. இருந்தாலும் என்னைப் பழிவாங்கிய தூர்தர்ஷனுக்கு நான் யார் என்பதை நிரூபிக்க ஒரு சவாலாகவே இதைச் செய்கிறேன்'' - இப்படிச் சொல்கிறவர் நாராயணன்.

அப்படி ஒன்றும் வித்தியாசமாக இல்லையே? இதுவும் வெறும் சினிமா..

''உங்கள் பார்வை தவறு. குதிரை ரேஸில் மோட்டார் சைக்கிள் கலந்து கொள்ள முடியுமா? அது மாதிரிதான் இதுவும். பற்பல நிர்பந்தங்களில் சினிமா நிகழ்ச்சிதான் வழங்க முடிகிறது. வேறு எதைச் செய்தாலும் தயாரிப்புச் செலவு எகிறி விடும். நான் உங்களிடம் கேட்பது இருக்கிற நிகழ்ச்சிகளில் என்னுடையது சிறப்பாக இருக்கிறதா? இல்லையா? என்பதுதான்! இது குதிரை ரேஸா, கழுதை ரேஸா - முதலிடம் என் குதிரை அல்லது கழுதைக்குத்தான்! இதை நான் சொல்லவில்லை. TRP ரிப்போர்ட் சொல்லுகிறது.''

மெட்ரோவுக்காக சுஜாதாவின் இரண்டு நாவல்களையும், ஒரு சிறுவர் நாடகத்தையும் தயாரித்துக் கொண்டிருக்கும் ஞாநி சொல்கிறார்: ''மெட்ரோவைப் பொறுத்தவரை - பிரதானமான பிரச்னை விளம்பரம்தான். டீ.வி. ரேட்படி பத்து செகண்டுக்கு ரூ. 5000. இந்த சினிமாப் பாட்டு போடுகிறவர்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு பைசா செலவு இல்லை! எனவே அடிமாட்டு விலைக்கு (ரூ. 1500 - 2000க்கெல்லாம்) விளம்பரதாரர்களை அணுகுகிறார்கள். என்னை மாதிரி கிரியேட்டிவ் ஒர்க் பண்ணுகிறவர்களுக்கு டீ.வி. ரேட்படி 5000 வந்தாலே போதுமானதாக இல்லை. விளம்பரம் தர விரும்புபவர்கள், 2000க்குள் கேட்பவர்களுக்குத் தருவார்களா? அல்லது என்னை மாதிரி முழு ரேட் எதிர்பார்க்கிறவர்களுக்குத் தருவார்களா? ஸோ, உருப்படியாக ஏதாவது செய்ய நினைத்தாலே பிரச்னைதான்.

விளக்கம்!

''நல்லது. Open to all என்கிற முறையை நீங்கள் கடைப்பிடித்தால் போதுமா? குவாலிட்டி வேண்டாமா? பணம் மட்டுமே குறி என்றிருக்கலாமா?''

''கண்டிப்பாக அப்படி ஒரு எண்ணம் இடையவே கிடையாது. இப்படி ஒரு சிஸ்டம் வைத்ததன் காரணமே, புதியவர்களை ஊக்குவிக்க வேண்டும் என்பதுதான். எங்கள் எதிர்பார்ப்பின்படியே நிகழ்ச்சிகளும் தரமாகத்தான் இருக்கின்றன.''

''எந்த அடிப்படையில் சொல்கிறீர்கள்?''

''மக்கள் ரசிக்கிறார்களே. அதைவிடவும் ஒரு ஜட்ஜ்மெண்ட் வேறு என்ன?''

''அப்படியானால் மக்களுக்காகத்தான் 'நேத்து ராத்திரியம்மாவை' 'அலவ்' பண்ணினீர்களா?''

''அது வேறு விஷயம். அந்தப் பாடல் ஆபாசமான ஒன்று எனினும் நாங்கள் கூடிய வரை தேவையற்ற காட்சிகளை எடிட் செய்துதான் ஒளிபரப்ப அனுமதித்தோம். 'சொல்லப் போனால் எங்கள் நிலையத்திலுள்ள பெண் அதிகாரிகளையும் நிகழ்ச்சியைப் பார்க்க வைத்து, அவர்கள் இதுமாதிரி 'இக்கட்டு' காட்சிகளில் என்ன மாதிரி ஃபீல் பண்ணுகிறார்கள் என்பதையும் கேட்டு, அதன் பின்னே, தேவையற்றவற்றை நீக்கி ஒளிபரப்புகிறோம்.''

''தனியார் தயாரிப்பாளர்கள் ஒளிபரப்ப விரும்பும் பாடல்களை நீங்களே 'ஒரு ரேட்டுக்கு' கொடுத்து விடுவதாக வரும் குற்றச்சாட்டு குறித்து...''

''மகா அபத்தம். நாங்கள் என்ன, பாட்டு விற்பனைக்கூடமா நடத்துகிறோம்? பாடல்கள் அந்தந்த படத் தயாரிப்பாளர்களிடம் இருக்கும். எங்களுக்குத் தேவையான போது நாங்கள் காசு கொடுத்து வாங்கிக் கொள்வோம். அதே மாதிரிதான் இந்த தனியார் தயாரிப்பாளர்களும். இதெல்லாம் வீண் புரளி.''

''பெண்கள், குழந்தைகள், சுற்றுச் சூழல், சமூக அக்கறை சார்ந்த தயாரிப்புகளுக்கு, சிறப்புச் சலுகையாகக் குறைந்த கட்டணம் வசூலிக்கப் பரிந்துரைக்கும் ஜோதர் கமிட்டியின் அறிக்கையை நீங்கள் அமுல்படுத்தாதது ஏன்?''

''அது ஆகஸ்டிலிருந்துதான் அப்ளை ஆகிறது. மேலும் அந்த கமிட்டியே தற்போது ரிஸைன் பண்ணி விட்டது.''

''மெட்ரோ நிகழ்ச்சிகளால் உங்கள் சொந்த தயாரிப்புகளின் 'ஆடியன்ஸ்' குறைந்திருப்பதை உணர்கிறீர்களா?''

''உங்கள் கேள்வியே தப்பு. மெட்ரோவை ஏன் தூர்தர்ஷனிலிருந்து பிரித்துப் பார்க்கிறீர்கள்? எங்கள் மேற்பார்வையில் தனியார் தயாரிக்கிறார்கள். அவ்வளவுதான். ஏன், விளம்பரதாரர் நிகழ்ச்சிகளும் கூட அப்படித்தானே? மெட்ரோவை ஜனங்கள் ரசிக்கிறார்கள் என்றால் - அது நாங்கள் எதிர்பார்த்து, நடந்திருக்கும் விஷயம் - ரொம்ப சந்தோஷப்படுகிறோம். தூர்தர்ஷன் தயாரிப்புக்களுக்கு ஆடியன்ஸ் நிறைய உண்டு. அது எப்போதுமே குறைவது இல்லை!''

''இது தவிர - தூர்தர்ஷனுக்கு தன்னுடைய குறிக்கோளில் ஆரம்ப முதலே 'தெளிவு' இல்லை. அவ்வப்போது தனது 'ரூல்'களை மாற்றிக் கொண்டே வந்தார்கள். உதாரணமாக, நிலையத்திற்குக் கொடுக்கப் பட வேண்டிய தொகையை முதலில் 80,000 என்று நிர்ணயித்து விட்டு, பின் (யாரும் அதிகம் முன்வராததால்) 54,000 ஆகக் குறைத்தது, விளம்பர நேரத்தை மூன்று நிமிடமாகச் சொல்லி விட்டு ஐந்து நிமிடமாக மாற்றியது, பாங்க் காரண்டி தொகையை பதினொன்று அல்லது இருபத்து நான்கு வாரத்திற்குக் கட்டச் சொல்லி, பின் இரண்டு, இரண்டு வாரங்களுக்குக் கட்டினால் போதும் என்பதாக மாற்றியது.. இப்படி பட்டியல் போடலாம். அவர்களுக்கே, அவர்கள் கொள்கைகளில் இத்தனை குழப்பம் இருக்கும் போது நாம் என்ன விதமான ஒத்துழைப்பை அவர்களிடமிருந்து எதிர்பார்ப்பது?'' - இப்படியாக ஞாநி குற்றம் சாட்டுகிறார்.

மெட்ரோ ஜூலை 31 வரைதான் என்று தூர்தர்ஷன் தரப்பில் சொல்லியிருப்பினும் மெட்ரோ அவர்களுக்குப் பொன் முட்டை இடும் வாத்து என்பதைப் பார்க்கையில் அத்தனை லேசில் விட்டு விடுவார்கள் என்று தோன்றவில்லை. மேலும், 'இத்தனை நாள் எங்கள் தயாரிப்பைக் குற்றம் சொல்லிக் கொண்டிருந்தீர்களே, இப்போது தனியாரிடம் கொஞ்சம் பொழுதை விட்டுக் கொடுத்திருக்கிறோம். அவர்கள் மட்டும் என்ன கிழித்து விடுகிறார்கள் பார்ப்போம்' என்று ஒதுங்கி வேடிக்கை பார்க்குமுகமாகவும் மெட்ரோ சானல் இருக்கலாம்.

ஆக மொத்தம் சரியான சிந்தனையும், அணுகுமுறையும், திட்டமிடலும் இல்லாததால் தூர்தர்ஷன் தானும் கெட்டு, தனியார் துறையின் நிகழ்ச்சிகளையும் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிக் கொண்டிருப்பது நிதர்சனம்.

– கிச்சா

புகைப்படங்கள் : கோபிநாத்

# தற்காப்புக்குக் கராத்தே!



* வயது தடையில்லை....

"கல்லூரிக்கு வரும் போதும் போகும் போதும் ஒருவன் எங்களைப் பின் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கிறான்; அவ்வப்போது எங்களைக் கிண்டலும் செய்கிறான். நீதான் கராத்தே கற்றுக் கொண்டிருக்கிறாயே! வந்து அவனை மிரட்டேன்!'' என்று ஒருநாள் சக மாணவிகள் இருவர் ரேஷ்மாவிடம் வந்து சொன்னார்கள்.

ரேஷ்மாவும் அடுத்த நாள் அந்த மாணவிகளுடன் சென்றார். குறிப்பிட்ட அந்த இளைஞனும் வழக்கம் போல் பின் தொடர்ந்து வந்தான். கூட இன்னொரு மாணவியும் வருவதில், அந்த இளைஞனுக்கு ஏக குஷி!

எல்லாம் கணநேரம்தான்! திடீரென்று அவன் இடுப்பில் மின்னலாய்த் தாக்கியது ரேஷ்மாவின் கராத்தே உதை! இதைச் சற்றும் எதிர்பார்க்காத அந்த இளைஞன், ''ஸிஸ்டர்! நான் இனிமேல் இப்படியெல்லாம் பின் தொடர்ந்து வரவே மாட்டேன். இனிமேல் இவர்கள் இருவரும் எனக்கு ஸிஸ்டர்ஸ்!'' என்று கையெடுத்துக் கும்பிடாத குறையாக மன்னிப்புக் கேட்டுவிட்டு நழுவினான்.

''அந்தச் சம்பவத்துக்குப் பிறகு என்னைப் பார்க்க நேரும்போதெல்லாம் அந்த இளைஞன் தலையைக் குனிந்து கொண்டு போய் விடுவான்!'' என்கிறார் ரேஷ்மா.

''சக மாணவிகள் மத்தியில் உங்களைப் பற்றிய ரியாக்ஷன் எப்படி?''

''எல்லோரும் என்னைப் பாராட்டினார்கள். உன்னைப்போல் நாங்களும் கராத்தே கற்றுக் கொள்கிறோம் என்று சிலர் கராத்தே வகுப்புகளுக்கும் வர ஆரம்பித்தார்கள். கல்லூரியில் மட்டுமல்ல; என் குடியிருப்புப் பகுதியின் அக்கம் பக்கத்திலிருப்பவர்களும் என்னைப் பாராட்டினார்கள். என் பக்கத்திலிருக்கும் போது, மற்ற பெண்களுக்கும் ஒரு தைரியம் வருவதாகச் சொல்கிறார்கள்!''

* மாணவ, மாணவியருக்கு இலவசம்!



* ரேஷ்மா : ''பயமின்றிச் செல்கிறேன்!''



✱ எதிராளியைச் செயலிழக்கச் செய்யும் யூபி ஹோசே முறை.....

''உங்கள் குடும்பத்தில் எப்படி?''

''என் குடும்பம் ரொம்பவும் ஆசாரமான மார்வாடிக் குடும்பம் தான். ஆயினும் காலத்துக்குத் தகுந்த மாதிரி மாற வேண்டாமா? அதனால்தான் ஆசாரத்தையும் மீறி, நான் கராத்தே கற்றுக் கொள்ள அனுமதித்தார்கள். இப் போதெல்லாம் இரவில் நான் தனியாக வீடு திரும்ப நேரிட்டா லும் என் குடும்பத்தார் கவலைப் படுவதில்லை. காரணம் கராத்தேதான்!'' என்கிறார் ரேஷ்மா.

''நீ எதற்காகக் கராத்தே கத்துக்கறே?'' என்று ஐந்தரை வயதுச் சிறுவனான அஜித் திடம் கேட்டபோது, ''என்னை யாராவது அடிக்க வந்தா நான் அதிலிருந்து தப்ப வேணாமா அங்கிள்? அதுக்குத்தான் கத்துக் கிறேன்!'' என்கிறான் அவன்.

''அதையேன் சார் கேட்கறீங்க? டெலி விஷனில் புரூஸ் லீ படம் பார்த்துப் பார்த்து, இவனுக்கும் புரூஸ் லீ மாதிரி ஆக வேண்டு மென்று ஆசை வந்து, எங்களை நச்சரிக்க ஆரம்பித்து விட்டான். அதனால்தான் இவனை கராத்தே கிளாஸில் சேர்த்து விட் டேன். சேர்ந்து மூன்று மாதங்கள்தான் ஆகின்றன. அதற்குள் இவன் வயதுக்கு அதிக மாகவே கற்றுக் கொண்டு வருகிறான்!'' என்று பெருமை பொங்கச் சொல்கிறார் சிறுவன் அஜித்தின் தந்தை மோகன் சந்திரன்.

''ஆண்களைப் பொறுத்தவரை கராத்தே தற்காப்புக்கு மட்டுமல்ல; கராத்தே பயிலப் பயில சிகரெட் பழக்கம், குடிப் பழக்கம் போன்ற தீமை பயக்கும் பழக்கங் களும் அவர்களிடமிருந்து அறவே போய் விடுகிறது!'' என்று உறுதியாகச் சொல்லு கிறார் கராத்தே பள்ளிகள் நடத்திக் கொண் டிருக்கும் ஷீஹான் ஹுசைனி.

''அதெப்படி அத்தனை உறுதியாகச் சொல்லுகிறீர்கள்?''

''அது மாதிரியான பழக்கங்கள் இருப்ப வர்களால் கராத்தேயைச் சிறப்பாகக் கற்றுக் கொள்ள முடியாது. காரணம், புகைப் பழக்க மும் மதுப் பழக்கமும் உடல் வலுவை இழக் கச் செய்து விடுகின்றன. கராத்தேக்கு உடல் வலு அவசியம் என்பதால், அதுபோன்ற தீய பழக்கமுள்ளவர்கள் கராத்தே பயிற்சியைத் துவங்கும் போது சிரமப்படுவார்கள். ஒரு கட்டத்தில் கராத்தேயா, அந்தப் பழக்கங் களா என்ற கேள்வி எழும். அப்போது நிச்சய மாக அவர்களின் மனம் கராத்தே கற்றுக்



✱ எதிராளியைச் செயலிழக்கச் செய்யும் டோக்கோ ஹோசே முறை....

கொள்வதையே தேர்ந்தெடுக்கும். மனம் இதில் ஈடுபட்ட பிறகு, மற்றவற்றுக்கு இட மேது? இதை நான் எனது பயிற்சிப் பள்ளி களில் கற்றுக் கொள்ள வரும் மாணவர் களின் அனுபவங்களை வைத்துத்தான் சொல்கிறேன்!'' என்கிறார் ஹுசைனி.

''கராத்தே பயிலப் பயில உடல் தசை கள் கெட்டிப்பட்டு, உடலும் கட்டுமஸ்தான அமைப்பைப் பெறும். இது ஆண்களுக்குச்



✱ ஹுசைனி: ''கடுமையான முறைகளும் உள்ளன!''



✱ அஜித்: புரூஸ்லீ போல....

சரி. ஆனால், பெண்களின் உடல் இதன் மூலம் மென்மையை இழந்து விடுமே! அதைப் பெண்கள் விரும்புகிறார்களா?''

''இது போன்ற தவறான சந்தேகம் பலருக்கும் இருக்கிறது. ஆனால் இது உண்மையல்ல. ஆண்களுக்கு அளிக்கப்படும் கராத்தே பயிற்சிகளில், பலத்தை பிரயோகப்படுத்துகிற முறை சொல்லிக் கொடுக்கப்படுகிறது என்றால், பெண்களுக்கான பயிற்சிகளில் வேகத்தைப் பயன்படுத்துவதுதான் பிரதானமாக இருக்கும். அதனால், பெண்களின் உடல் மென்மை மாறி, கடினத் தன்மை வருவதற்கே வாய்ப்பில்லை. உங்கள் சந்தேகம் தீர ரேஷ்மாவின் கைகளைப் பாருங்கள்!'' என்றார் ஹுசைனி.

ரேஷ்மா தமது இரண்டு உள்ளங்கைகளையும் விரித்துக் காண்பித்தார். பார்வைக்கே அதில் பஞ்சின் மென்மைதான் புலப்பட்டது. அந்த மென்மையான கைகளைக் கொண்டுதான் செங்கல்லை உடைத்துக் காட்டுகிறார் ரேஷ்மா.

''இது மட்டுமல்ல; எனது உள்ளங்கைகளின் மேல் ஒரு மாருதி ஜிப்சியை ஏற்றினாலும் எனக்கு ஒன்றும் ஆகாது. வேண்டுமானால் சோதித்துப் பார்க்கிறீர்களா?'' என்கிறார் ரேஷ்மா.

பெண்களின் தற்காப்புக்குக் கராத்தே உதவுகிறது என்பதற்கு இன்னோர் உதாரணம் தக்ஷாவும் வாகேஸ்வரியும். தம்மிடம் வம்பு செய்தவனைப் பின்னங்கால் பிடரியில் பட ஓடச் செய்திருக்கிறார் தக்ஷா. செயின் பறிக்க வந்தவனைத் துவைத்து எடுத்து விட்டார் வாகேஸ்வரி.

''கராத்தே கற்றுக் கொள்வதென்பது இளம் பெண்களுக்கு வேண்டுமானால் சாத்தியமானதாக இருக்கலாம். ஆனால், திருமணமான பெண்களுக்குச் சாத்தியமாகுமா?''

''ஏன் சாத்தியமாகாது?'' என்று கேட்கிறார் ஹுசைனி. ''திருமணமான பெண்களாலும் கலபமான சில முறைகளைக் கற்றுக் கொள்ள முடியும். அதுவும் முடியாவிட்டால், அதைவிடவும் சில கலபமான முறைகளைக் கற்றுக் கொள்ளலாம். உதாரணத்திற்கு இரண்டு கலபமான முறைகளை விளக்குகிறேன் பாருங்கள்!'' என்று நமக்குப் பின்னால் வந்து நிற்கிறார் ஹுசைனி.

சட்டென்று நமது காதுகளின் பின்புறமுள்ள இரண்டு இடங்களில் நமது இரண்டு கட்டை விரல்களாலும் அமுக்குகிறார். அவ்வளவுதான்! பிராணன் போகிற வலி நமக்கு. அந்தப் புறமும் இந்தப் புறமும் அசைய நினைத்தாலும் அசைய முடியவில்லை; நமது கைகளிரண்டும் காணாமல் போய் விட்டது போல் அசைவற்று நிற்கிறோம்!

அடுத்ததாக, நமது ஒரு கைக்கட்டை விரலைப் பிடித்து லேசாக வளைக்க, நமது மொத்த உடல் இயக்கமும் ஸ்தம்பித்துப் போய்விடுகிறது. இத்தனைக்கும் இதை மிக மிக லேசாகத்தான் செய்தாராம் ஹுசைனி!

''இதுபோல் நமது உடலில் நாற்பத்து நான்கு இடங்கள் உள்ளன. அந்த இடங்களில் லேசாகத் தொட்டாலும் போதும்; எதிராளி செயலிழந்து போய் விடுவான். இதையெல்லாம் திருமணமான பெண்களும் கலபமாகக் கற்றுக் கொள்ளலாம். தங்களைத் தற்காத்துக் கொள்கிற ஒரு சூழ்நிலை ஏற்படுகிற போது, இவை அவர்களுக்கு மிகவும் பாதுகாப்பாக அமையும்!'' என்கிறார் அவர்.

மேலும், ''கராத்தே வெறும் தற்காப்பு விஷயம் மட்டுமல்ல; ஒருவன் முழு ஈடுபாட்டுடன் இந்தப் பயிற்சிகளைச் செய்யும் போது, அவன் மனம் ஒரு முகப்படப் பழகுகிறது. அதனால் மற்ற பணிகளையும் அவனால் திறம்படச் செய்ய முடியும்!'' என்ற மாஸ்டரின் கருத்தை ஆமோதிக்கிறார் இப்போது கம்ப்யூட்டர் படித்துக் கொண்டிருக்கும் ரேஷ்மா.

''இதன் காரணமாகத்தான் சென்னையிலுள்ள பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் எனது கராத்தே பள்ளியைச் சேர்ந்த பயிற்சியாளர்கள் சென்று, இலவசமாகக் கராத்தே கற்றுத் தருகிறார்கள்!'' என்கிறார் ஹுசைனி.

– இளங்கோவன்

அட்டையில் : ரேஷ்மா

அட்டை வண்ணப் படமும் படங்களும்: கோபிநாத்



• கீதா ராமசேஷன்



ஒரு குற்றம் நடந்து விட்டால் 'எப்படி, ற்காக நடந்தது? குற்றவாளி யார்?' என்று ராய்வதில் விஞ்ஞானபூர்வமான அணுகு றை இங்கு மிகக் குறைவாக உள்ளது. ளவுத் துறையின் பணியும் உற்சாகமளிப்ப க இல்லை. போலீஸார் ஏதோ ஒரு முடிவுக்கு ந்து, அந்த முடிவுக்கு ஏற்ப சாட்சியங்களைப் பற முயற்சி செய்கிறார்கள். நிகர விளைவு, றைகேடான கைதுகள், லாக் அப்பில் ன்முறை, கற்பழிப்பு, மரணம் இத்யாதி... காலித் கமிஷன் தனது சாரணையை முடித்துக் கொண்டு போலீஸாரைக் கடுமையாகக் ற்றம்சாட்டி, அண்மையில் அறிக்கை கொடுத்திருக்கிறது. ாலீஸாரின் அத்துமீறலால் பாதிக்கப்பட்ட பலருக்கு நஷ்டஈடும் பாரிசு செய்திருக்கிறார் நீதிபதி காலித். கமிஷன் அறிக்கை பற்றி ங்கே விளக்கமளிப்பவர் மனித உரிமைகள் ஆர்வலரான முக்கறிஞர் கீதா ராமசேஷன் :

# போலீஸார் அரக்கர்களாக மாறும் போது...

அண்ணா நகரில் மீனா என்ற பெண் 1989-ம் வருடம் போலீஸாரால் முறை ாகக் கைது செய்யப்பட்டு, பத்து கள் மனநல மருத்துவமனையில் வைக் ட்டார். அவர் சார்பாக நான் ரிட் மனு ு தாக்கல் செய்தேன். வழக்கை ரித்த நீதிபதி மிஸ்ரா, பாதிக்கப்பட்ட வுக்கு அரசு 50,000 ரூபாய் நஷ்டஈடு தர ண்டும் என்று தீர்ப்பு வழங்கினார்.

காலித் கமிஷன் நியமனத்துக்கு இந்த கு ஒரு தூண்டுகோல் என்று சொல்ல . ஏனென்றால் நீதிபதி மிஸ்ராவின் தீர்ப் ப் பிறகு. இதுபோன்ற ரிட் மனுக்கள் யவே ஹைகோர்ட்டில் தாக்கல் செய் ட்டன. அப்போது அரசு தலைமை கறிஞராக இருந்த ஹபிபுல்லா பாட்சா, பட்ட ரிட் மனுக்கள் வந்திருப்பதால் ாகவே ஒரு நீதிபதி போட்டு விசாரிக்க என்று நீதிமன்றத்தில் கோரினார். அடிப்படையில் நியமிக்கப் துதான் காலித் கமிஷன். கமி க்கு நேரடியாக வந்த பல் டு மனுக்களையும் சேர்த்து, த்தம் 29 ரிட் மனுக்களை விசா ர் காலித். பாதிக்கப்பட்ட க்கு 30,000 ரூபாயிலிருந்து டு லட்சம் ரூபாய் வரை ஈடு சிபாரிசு செய்யப்பட் கிறது.

போலீஸாரின் முறை ன கைதுகளிலிருந்து பொது ர் தப்பிப்பது எப்படி?

அதிகாரமும், ஊழலும் காவல் துறையுடன் கைகோத்துச் செல்கின்றன. இந்த நிலையில் குற்றத்துக்குத் தொடர்பே இல்லாதவர் போலீஸாரால் கைது செய்யப்படும் போது, உடனடியாகச் செய்ய வேண்டியது வழக்கறிஞரின் உதவியை நாடுவதுதான். ஏழைகள் என்ன செய்வார்கள் என்று கேட்பீர்கள். அதற்குத்தான் இலவச சட்ட உதவி மையம் இருக்கிறதே. அதை நாடலாம்.

போலீஸாரால் பிடித்து வைக்கப்பட்டவர் 24 மணி நேரத்துக்குள் மாஜிஸ்திரேட் முன்னால் ஆஜர்படுத்தப்பட வேண்டும். மாஜிஸ்திரேட், போலீஸார் கொடுக்கும் தகவல்கள் அடிப்படையிலும், பிடிக்கப்பட்டவரை விசாரிப்பதன் மூலமும், நீதிமன்றக் காவலில் வைப்பதா, போலீஸ் காவலில் வைப்பதா என்று தீர்மானிப்பார். நாம்



முறைகேடாகக் கைது செய்யப்பட்டிருந்தால் அந்த விவரத்தையும் போலீஸார் கொடுமைப்படுத்தியிருந்தால் அதையும், தைரியமாக மாஜிஸ்திரேட்டிடம் சொல்ல வேண்டும். பாதிக்கப்பட்டவர் சொல்லப் பயந்தாலும் மாஜிஸ்திரேட் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**கா**லித் கமிஷன் சொல்லியுள்ள ஒரு விஷயம் மிகவும் முக்கியமானது. காவலில் வைக்கப்பட்டவர்கள் மரணமடைந்ததற்குக் காரணம் என்று குற்றஞ்சாட்டப்பட்ட பதினோரு போலீஸ் அதிகாரிகள், எந்தவிதமான தண்டனைக்கும் ஆளாகாமல், பதினைந்து மாதத்திற்குள் பணிக்குத் திரும்பி விட்டார்கள் என்பதுதான் அது.

கைதி ஒருவர் காவலில் மரணமடைந்தால், ஒரு கொலை வழக்கு போல அதை விசாரிக்க வேண்டும். விசாரணை முடிவில், போலீஸ் அதிகாரிகள் குற்றவாளிகள் என்று தீர்மானிக்கப்பட்டால், இறந்து போனவரின் குடும்பத்துக்கு நீதிபதி நிர்ணயிக்கும் நஷ்டஈட்டுத் தொகையை, அவர்களிடமிருந்து பெற்றுத் தர வேண்டும். வேண்டுமானால், அரசு முன்னே கொடுத்து விட்டுப் பின்னர் போலீஸ் அதிகாரிகளிடம் வசூலித்துக் கொள்ளலாம். காவலில் நிகழும் சந்தேக மரணங்களின் போஸ்ட் மார்ட்டத்தின் போது குறிப்பிட்ட பகுதியில் உள்ள நியாயமான, அப்பழுக்கற்ற ஒரு டாக்டரையும் உடன் இருக்கச் செய்வதன் மூலம் அனாவசிய சந்தேகங்களைத் தவிர்க்கலாம்.

**கா**லித் கமிஷன் அறிக்கையை ஆறு மாதத்துக்குள் சட்டமன்றத்தில் வைத்திருக்க வேண்டும். ஏதோ சால்ஜாப்பு கூறி காலம் கடந்து அதை வைத்தது மட்டுமல்லாமல், சட்டமன்றத் தொடர் முடியும் போது வைத்ததால், அறிக்கை மீது எந்தவிதமான விவாதமும் நடத்த வழி இல்லாமல் செய்து விட்டது அ.தி.மு.க. அரசு. மேலும், காலித் கமிஷன் அறிக்கையை ஏற்றுக் கொண்டதா என்பதையும் அரசு தெளிவுபடுத்தவில்லை.

இந்தச் சூழ்நிலையில் காலித் கமிஷன் அறிக்கையைக் கவனித்து அரசு நடவடிக்கை எடுத்து சீர்திருத்தங்களைப் புகுத்துமா அல்லது போலீஸ் துறை தொடர்பான வேறு பல கமிஷன் அறிக்கைகள் போல இதுவும் தூசிப் போர்வை போர்த்திக் கொண்டு குறட்டை விட வேண்டியதுதானா?

சந்திப்பு, கட்டுரை : ஸ்ரீநிவாசன்












# சில குழந்தைகள் மற்றவர்களை விடத் துறுதுறுவென இருப்பது ஏன்?

துறுதுறுவென இருப்பதற்குத் தேவையான சக்தியைப் பெறுவதற்கு, உங்கள் குழந்தைக்குச் 'சரியான' கிலோரிகள் தேவை. புரோட்டீன்களும், கார்போஹைடிரேட்ஸும், கொழுப்புச் சத்தும் சரியான சமச்சீர் விகிதத்தில் கலந்திருந்தால்தான் இந்தக் கிலோரிகள் கிடைக்கும்.

இந்தச் 'சரியான' கிலோரிகள் கிடைக்க வேண்டுமானால் அதற்குச் சிறந்த வழி ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவைக் கொடுக்க வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆன பிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு வேளையும், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவை உங்கள் குழந்தைக்குத் தர வேண்டும்.

பெரும்பாலான தாய்மார்களுக்கு இது முடிவதில்லை. வழக்கமான உணவு வகைகள் சரிப்பட்டு வருவதில்லை.

பிறகு என்னதான் வழி ?

செரிலாக். ஏனெனில் புரோட்டீன்கள் செறிந்துள்ள பால், கோதுமை இரண்டுமே இதில் உள்ளன. மேலும், கார்போஹைடிரேட்ஸ், கொழுப்புச் சத்து, மினரல்கள், இரும்புச் சத்து, கால்ஷியம் ஆகியன சரியான அளவில் கலந்த உணவு செரிலாக். வைட்டமின்கள் A, D, E, B-காம்ப்ளெக்ஸ் மற்றும் C இதற்குப் பலம் சேர்க்கின்றன. ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு செரிலாக்.

இன்னுமொரு சிறப்பு. செரிலாக் இப்போது நெஸ்லேயின் புரட்சிகரமான புதிய Z-கோன் என்ஸைமேட்டிக் முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகின்றன. செரிலாக் மிக எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் செரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு கிலோரிகள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை துறுதுறுவென இருப்பதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு இது.






**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக் அனுகூலம்**

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.

பழனி

## தேர்தல் :

'இங்கேயா தேர்தல் நடக்கப் போகிறது?' என்று கேட்கும் அளவுக்குப் படு அமைதியாகக் காட்சியளித்தது பழனி நாடாளுமன்றத் தொகுதி. இந்த மாதம் முதல், இரண்டாம் தேதிகளில் தொகுதியைச் சுற்றிப் பார்த்த போது, சுவர்களில், சின்னத்தோடு, வேட்பாளரின் பெயர் எழுதும் வேலை மட்டுமே முடிந்த நிலையில், தோரணங்களும், பானர்களும் அதிகம் பார்க்க முடியவில்லை.



பெரிய தொகுதி. பத்து லட்சத்துக்கு மேற்பட்ட வாக்காளர்கள். ஆறு சட்டமன்றத் தொகுதிகளில், நத்தம் மட்டும் இ. காங்கிரஸ் வசம் இருக்கிறது. மற்ற ஐந்தும் அ.தி.மு.க. ஆனால் ஆரம்பம் முதலே பழநி என்னவோ 'இ. காங்கிரஸ் கோட்டை' என்று ஒரு பெயர் ஏற்பட்டுப் போனதாலோ என்னவோ, அ.தி.மு.க. சார்பில் ஆறு அமைச்சர்கள், தொகுதி தொகுதியாகப் பிரசாரம் செய்யக் களத்தில் இறங்கி விட்டனர். ஆனால் அவர்களது கூட்டணியை இழந்த நிலையிலும் காங்கிரசின் குறட்டைச் சத்தத்தைத்தான் நம்மால் கேட்க முடிந்தது.

ஒட்டன்சத்திரத்தில் நடந்த அ.தி.மு.க. செயல் வீரர்கள் கூட்டத்தில், பழநி நாடாளுமன்றத்துக்குப் போட்டியிடும் வேட்பாளரை எஸ்.டி.எஸ்., கு.பா. கிருஷ்ணன் முதலிய எல்லாரும் அறிமுகம் செய்து பேசிய பிறகு, திண்டுக்கல் எம்.பி. சீனிவாசன், ''இந்தத் தேர்தல் ஒரு உரைகல் மாதிரி. இதுவரை நாம் காங்கிரசைச் சுமந்தோமா, காங்கிரஸ் நம்மைச் சுமந்ததா என்று தெரிந்து கொள்ளும் வாய்ப்பைத் தந்திருக்கிறது. நம் இதய தெய்வம் புரட்சித் தலைவியே இந்தத் தேர்தலில் பழநியில் நிற்கிறார் என்றால், நாம் எப்படிச் செயல்பட்டு வெற்றிக்கனியை அவர் காலடியில் சமர்ப்பிப்போமோ, அதே போல சுறுசுறுப்பாகப் பணியாற்றி, நம் அருமை நண்பர் குமாரசாமியை வெற்றி பெறச் செய்ய வேண்டும்'' என்றார். ''காங்கிரசைப் பற்றி நாம் அதிகம் கவலைப்படத் தேவை இல்லை!'' என்று இன்னொரு பேச்சாளர் சொல்லும்போதே சிரிப்பு அலைமோதியது. ''ஆனால் நாம் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டியது அந்தக் கட்சியிடம்தான். அவர்கள் என்ன வேணுமானாலும் பண்ணுவாங்க. தோத்துப்புடுவோம்னு தெரியற இடங்கள்ளே பூத்துக்குள்ளே பூந்து, பெட்டியையே எடுத்துக்கிட்டு ஓடிடுவாங்க!'' என்றார் — 'அந்த'க் கட்சி என்பது தி.மு.க.!



✱ சுப்புலட்சுமி ஜெகதீசன் : தி.மு.க. வேட்பாளர்



✱ கே. எஸ். வேணுகோபால் : இ. காங். வேட்பாளர்

# அ.தி.மு.க. : படையெடுப்பு; தி.மு.க. : தன்னம்பிக்கை; காங்கிரஸ்: மெத்தனம்!




* குமாரசாமி : அ.தி.மு.க. வேட்பாளர்

**ந**த்தம் தொகுதி காங்கிரஸ் எம்.எல்.ஏ. ஆண்டி அம்பலத்தைத் தேடி அவர் வீட்டில் விசாரித்தோம். ''ஐயா மெட்ராசிலதான் இருக்காக. இன்னம் வரலே!'' என்றார்கள். நத்தம் சந்தையில் அக்கம் பக்கத்துக்காரர்களோடு உள்ளூர் வாசிகளும் ஏராளமாக ஜே ஜே என்று காணப்பட்ட போது இது மாதிரி மக்களைச் கலபமாகச் சந்திக்கும் சந்தர்ப்பங்களைக் கூட காங்கிரஸ் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளாதது அதன் மெத்தனத்திற்கு இன்னோர் உதாரணமாகத்தான் தெரிந்தது.

**ப**ழநியில் அ.தி.மு.க. நகரச் செயலாளர் எஸ்.எஸ்.கே. ஹகீமைச் சந்தித்த போது, காங்கிரசுடன் கூட்டணியை முறித்துக் கொண்ட முடிவை 'வரவேற்கத்தக்க முடிவு' என்றும் 'வரப்பிரசாதம்' என்றும் வர்ணித்தார் அவர். ''இதுவரை அவர்களை நாம் சுமந்து வந்தோம். அவர்களுடைய கூட்டணிக்குத்தான் இதுவரை வேலை செய்தோம். இந்தத் தடவை இரட்டை இலைக்கு அம்மா கொடுத்த பரிசு, பழநி டவுனைச் சேர்ந்த தொண்டனுக்குக் கிடைத்திருக்கிறது.''

மூன்றாம் தேதி, அமைச்சர் ரகுபதி வோட்டு வேட்டையை ஆரம்பித்து வைத்து விட்டு, கடைசி வரை இருப்பார் என்றும், அவர்தான் பொறுப்பாளர் என்றும் சொன்னார் ஹகீம்.

''உங்கள் கோஷ்டி சண்டை எல்லாம் ஓய்ந்து விட்டதா?''

நகரச் செயலாளர் ஹகீமுக்கும், பழநி சட்டமன்ற உறுப்பினர் கப்புரத்தினத்துக்கும் ஏழாம் பொருத்தம் என்பதும் எஸ்.டி.எஸ். வந்த போது இரண்டு கோஷ்டிகளும் ஆளுக்கொரு மேடை போட்டு அடித்த கொட்டமும் பிரசித்தம்!

''கோஷ்டி இருந்தது உண்மைதான். ஆனால் பழநி தொகுதி தேர்தல் அறிவித்த உடனே எல்லாம் ஒற்றுமையாகிட்டோம்!'' என்றார் ஹகீம்.



**ப**ட்டகாரர் சத்திரம், பழநியில் காங்கிரஸ் வேட்பாளர் வேணுகோபாலின் தலைமையகம் மாதிரி. முன்னாள் எம்.பி. சேனாபதி கவுண்டரின் இளைய மகன் இவர். அ. தி. மு. க. உறவு இல்லை என்று அறிந்த பின், தனித்துப் போட்டியிடும் காங்கிரஸ் வேட்பாளராக இவர் இருக்க விரும்பவில்லை என்றும், நிர்ப்பந்தம் காரணமாகவே இவர் நிற்கிறார் என்றும் பலமாக ஒரு வதந்தி இப்போது உலவிக் கொண்டிருக்கிறது.

இங்கே வேணுகோபால் பற்றி ஒரு சின்ன அறிமுகம் : வயது 42. உயர்நிலைக் கல்வி வரை படித்தவர். மனைவி இரண்டு குழந்தைகள். இளமை முதலே காங்கிரஸ் இயக்கத்தில் பற்றும், பிடிப்பும் உள்ளவர்.

பழநி நாடாளுமன்றத் தொகுதி பிரச்னை களில் தகப்பனாருக்கு உடனிருந்து உதவி வந்தவர். இவரது தாராபுரம் இல்லத்தில் ஏழை மாணவர்களுக்கு இலவச உணவும், தங்குமிடமும், உடையும் கொடுத்து வரு கிறார். மூப்பனார் - வாழப்பாடி இருவ ரின் நம்பிக்கைக்கும் பாத்திரமானவர். மத்திய அமைச்சர்கள் பலர் இவருக்கு நண்பர்கள்.

பழநியில் மாவட்டத் துணைத் தலைவர் ராமச்சந்திரன் சொன்னார் : ''மூணாம் தேதிக்குப் பிறகு முறையாக பிரசாரம் ஆரம்பிப்போம். தலைவர்கள் எல்லாரும் வருகிறார்கள். பழநியில் காங்கிரசைத் தவிர வேறு யாருக்குமே வாய்ப்பு இல்லை! கான்வஸிங் ஆரம்பித்திருக்கிறோம். வீடு வீடாகச் சென்று ஓட்டுக் கேட்பது, ஆடம்பர மில்லாமல் அமைதியாக நடைபெறுகிறது. ஆடம்பரத்தில் முன்னாள் எம்.பி.க்கும் சரி, இப்போநிற்கிறவருக்கும் சரி, நம்பிக்கையே இல்லை! பார்லிமெண்ட்டில் காங்கிரஸ்தான் வரணும் என்று, எம்.ஜி.ஆரை ஆதரிப்ப வர்கள் கூட, எங்களுக்கே ஆதரவு தெரிவித் திருக்கிறார்கள். இந்தக் குடும்பத்துக்குக் கெட்ட பெயரே கிடையாதுங்க!'' என்றார் அழுத்தமாக.


✱ கருகருப்பான தி.மு.க. விளம்பரங்கள்

தி.மு.க. நகரச் செயலாளர் குமாரசாமி உற்சாகத்தின் சின்னமாகத் தெரிந்தார். கட்சிப் பேச்சாளர்களைக் கொண்டு தேர்தல் பிரசாரக் கூட்டங்களை நடத்தி விட்டவர், பேராசிரியரின் வருகைக்காகக் காத்திருந் தார்.

''ஆயக்குடி முதல் பழநி வரை சுவர் விளம்பரம் செய்திருக்கிறோம். மரங்களில் கூட உதயசூரியன் சின்னம் பார்த்திருப் பீர்களே? வாக்காளர் பட்டியலை விநியோ கித்து விட்டோம். ஐந்தாம் தேதிக்குள் வெரிஃபிகேஷன் வேலை முடிந்து விடும். பூத் ஏஜெண்ட் நியமனம் மாதிரி சில சடங்கு கள் பாக்கி. அதையும் முடித்து விட்டு, தேர்தல் வரை வீடு வீடாகச் சென்று ஓட்டுக் கேட்போம். அந்தத் தொகுதி ஸ்ட்ராங், இந்தத் தொகுதி வீக் என்று கிடையாது. பொதுவாகவே விலைவாசி ஏற்றம் மக்களை ரொம்ப பாதிச்சிருக்கு. விவசாயக் கூலிகள் மத்தியிலும் அதிருப்தி இருக்கு. அம்மா அம்மா என்று சொல்லி வந்தோமே - ஒண்ணும் பிரயோஜனமில்லையே என்று வெறுப்பு வந்துட்டிருக்கு... ஆறு தொகுதிகளிலுமே மிக நன்றாக இருக்கிறது வாய்ப்பு - குறிப்பாக பழநி. வெள்ளகோவில் அடுத்த தாக. அப்புறம் ஒட்டன்சத்திரம். காங்கேயம், வேடசந்தூர், நத்தம் இந்த வரிசையில் இருக்கு. எம்.ஜி.ஆர். இருந்த போது ஏழை அடித்தட்டு மக்கள் ஓட்டுப் போட்டாங்க. இப்போ அப்படி இல்லே. சேனாபதி கவுண்டர் பத்து ஆண்டுக் காலமா எம்.பி. யாக இருந்து, ஒரு தடவை கூட நாடாளுமன்றத்தில் பேசின தில்லை. அதனால் இந்த முறை இந்தத் தொகுதியை எங்களிடம் கொடுங்கள் என்கிறோம். கலைஞர் மீண்டும் வர இந்த வெற்றி அச்சாரமாக இருக்கும். அதற் காகத்தான் நாங்கள் கடுமையாகப் பாடு படறோம். இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகள், முஸ்லிம் லீக், ஃபார்வர்ட் பிளாக் எல்லாம் ஆதரவு கொடுத்திருக்கின்றன. வன்னியர் ஓட்டு இங்கே முக்யமான ஃபாக்டர் இல்லே!''

✱ பி. ராமச்சந்திரன் : மாவட்ட துணைத் தலைவர்



✱ குமாரசாமி : தி.மு.க. நகரச் செயலாளர்



HMV ஆடியோகாசெட்

# அன்றும் இன்றும் என்றும்

## காலத்தை வெல்லும் திரு. TMS

(டி. எம். சௌந்தரராஜன்)

## மீண்டும் பாடியுள்ள பழைய பிரபல திரைப்பட பாடல்கள்



தமிழ் சினிமா உலகில் நாற்பது ஆண்டுகளாக பலநூறு பாடல்களைப் பாடியுள்ள திரு. TMS-ன் இசை வெள்ளத்திலிருந்து அவர் தேர்ந்தெடுத்த பத்து பாடல்கள் உங்களுக்கெனவே பாடப்பட்டவை.

கம்ப்யூட்டர் இசை வடிவமைத்தவர் : திரு. T. செல்வகுமார்

விலை ரூ. 29/- மட்டுமே

(TPHV 32850)

அனைத்து HMV ஆடியோ காசெட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

RPG ENTERPRISES

HMV



✱ சுப்புரத்தினம் : பழனி எம்.எல்.ஏ.



✱ நயீம் : அ.தி.மு.க. நகரச் செயலாளர்

தி.மு.க. வேட்பாளர் சுப்புலட்சுமி ஜெகதீசன் தேர்தல் பிரசாரத்தைத் துவங்கி விட்டிருந்தார். ''தி.மு.க.வைப் பொறுத்தவரை தொண்டர்களின் உழைப்பு ஒரு பெரிய பலம்!'' என்றார் ஒரு பழநிவாசி.

## பழநி தேர்தல் ஒத்திவைப்பு!

**ப**ழநி தொகுதிக்கு நாம் போயிருந்த போது, தேர்தல் உண்மையிலேயே நடக்குமா என்ற சந்தேகத்தை அ.தி.மு.க. வட்டாரத்தில் எழுப்பினார்கள். 'கடைசி நிமிஷத்தில் தேர்தல் தள்ளி வைக்கப்படும்' என்ற ஐயம் அவர்கள் மத்தியில் தெளிவாகத் தெரிந்தது. 'பிரதமர் காஞ்சிபுரம் வந்து போன பிறகு தள்ளிவைக்கும் அறிவிப்பு வெளியாகும்' என்று காங்கிரஸ் வட்டாரத்தில் நம்பிக்கை தெரிவிக்கப்பட்டது. தேர்தல் பணிகளில் காங்கிரஸ் அக்கறை காட்டாமல் மந்தமாகச் செயல்பட இந்த நம்பிக்கை ஒரு காரணம் என்று இப்போது உறுதிப்படுகிறது. இன்றைய நிலையில் தேர்தலைச் சந்திக்க காங்கிரஸ் தயாராக இல்லாததால் வறட்சி நிலைமையைக் காரணம் காட்டி, தேர்தல் தள்ளி வைக்கப்பட்டது, காங்கிரஸுக்கு மகிழ்ச்சியளித்து அதனை வரவேற்றிருக்கலாம். ஆனால் தேர்தலைச் சந்திக்க அவர்கள் அஞ்சினார்கள் என்பதே அவர்கள் இமேஜ் குறைய வழிவகுக்கும். அக்கட்சிக்கு மக்களிடையே மதிப்பும் ஆதரவும் குறையவே செய்யும்.

**அ**.தி.மு.க. வேட்பாளர் குமாரசாமியைச் சந்தித்தபோது, ''கூட்டணி முறிந்ததில் எங்களுக்கு அட்வான்டேஜ்தான். எங்களால்தான் அவர்கள் ஜெயித்தார்களே தவிர, அவர்களுக்கு இருந்த பலத்தில் மட்டும் ஜெயிக்கவில்லை'' என்றார்.

''இங்கே முக்கியமான பிரச்னை எதுவும் இல்லையா?''

''எதுவுமில்லை. குடிநீர்ப் பிரச்னை தமிழ்நாடு பூரா இருக்கு... பழநி விவசாயத்தை நம்பி வாழும் மக்களைக் கொண்டது. பெரும்பாலான ஏரியா புஞ்சை சாகுபடிதான். இண்டஸ்ட்ரீஸ் ஆரம்பித்து வேலை வாய்ப்புக் கொடுப்பதற்குப் புரட்சித் தலைவியின் கவனத்துக்குக் கொண்டு வந்து நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவோம்'' என்றார், சட்டக் கல்லூரி மாணவராக இருந்த போதே, கட்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட குமாரசாமி.

எத்தனை பாதகமான நிலைமை இருந்தாலும், 'அம்மா' வந்து பிரசாரம் தொடங்கினால், எல்லாமே சாதகமாக மாறிவிடும் என்ற கருத்து அ.தி.மு.க. தொண்டர்களிடையே ஆழமாக வேரூன்றியிருக்கிறது. திண்டுக்கல்லில் சி.எம். தங்க, குடகனாறு பங்களா, பதினைந்து லட்ச ரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டு வருகிறது! தார் ரோடு வேலைகளும் ஜரூர்தான்.

''**க**ட்சிக்குப் பேரு கெட்டுக் கிடக்குதுங்க மக்கள் மத்தியிலே.... இலவச வேஷ்டி சேலையில கூட மொத்தமா காண்ட்ராக்ட் பேசிக் கொடுத்துட்டாங்க. வேண்டப்பட்டவங்களுக்கு மட்டும்தான் கிடைச்சுது. ரேஷன் கார்டு வீடியோ சுத்துலயும் அஞ்சு ரூபா, பத்து ரூபான்னு வாங்கிக்கிட்டுத்தான் கட்சி ஆளுங்களே கொடுத்தாங்க!'' என்கிறார் ஆட்டோ ஓட்டுனர் ஒருவர்.

''மக்களுக்கு இன்டரஸ்ட் இல்லீங்க. 89லே ஒரு தேர்தல். 91லே ஒரு தேர்தல். இப்போ 93லே ஒரு தேர்தல்னு வச்சுக்கிட்டே இருந்தா சலிப்பு ஆகாதுங்களா?'' என்றார் இளநீர் வியாபாரி சுப்பிரமணியம். ''அதுவுமில்லாம ராணிப்பேட்டை மாதிரி, இங்கேயும் தேர்தலை ரத்து செய்துடுவாங்களோன்னும் ஒரு டவுட் இருக்குங்க. அதான் டல்லா இருக்கு!'' என்றார் தொடர்ந்து.

**கா**ங்கிரசின் மெத்தனம், தி.மு.க.வின் தன்னம்பிக்கை, அ.தி.மு.க.வின் ஆறு அமைச்சர்கள் படையெடுப்பு என்று மே முதல் வாரத்தில் பழநி நாடாளுமன்றத் தேர்தல் காட்சியளித்தாலும் தேர்தல் நெருங்கும் போது ஒருவேளை படையெடுப்பைத் தன்னம்பிக்கை வெற்றி கொள்ளக்கூடும்; ஆனால் மெத்தனத்துக்கு விடிவு காலம் ஏது?

– சாருகேசி

புகைப்படங்கள் : கோபிநாத்

# அரண்மனைக் கிளி

இடைவேளையின் போது, பக்கத்திலமர்ந்து படம் பார்த்த நண்பருடன் (அவரும் ஒரு விமர்சகர்) பேச்சுக் கொடுத்தேன்.

''ராஜ்கிரணோட முந்தின படம் கூட இதே போல யதார்த்தமாத்தான் இருந்தது. ராஜ்கிரண் தனக்குன்னு ஒரு தனிப் பாதையை ஏற்படுத்திக்க முயற்சி செய்யறது நல்லாவே தெரியுது.''

''கனமான சம்பவங்கன்னு மட்டும் இல்லை. நகைச்சுவை நிகழ்ச்சிகளில் கூடக் கொஞ்சமும் செயற்கைக் கலப்பு இல்லை. அதுக்குன்னு தனிப் பாத்திரங்களாகச் செருகாம, கதையோடு ஒட்டிய நபர்கள், கதையோட்டத்தோட இணைந்த சம்பவங்கள், உண்மையிலேயே விரசமில்லாம, இரட்டை அர்த்தம் இல்லாம, மண்வாசனையோட இருக்கற வசனங்கள்... சிரிக்க வைக்கிற நிகழ்ச்சிகள்.''

''அதுலயும் ராஜ்கிரண் ஜவுளிக் கடையில உடல்பூரா ஜரிகை போட்ட பட்டுப் புடவை வாங்கற சம்பவம்... எல்லாருக்குமே தெரிஞ்ச ஒரு விஷயத்தை ரொம்ப அழகா அதுல கோத்து, எதிர்பார்த்திருக்காத விதத்துல அது இடம்பெறுகிறதாலேயே கூடுதலா அந்த இடத்துல சிரிப்பு...

''கனமான பாத்திரத்துல விஜயகுமாரி. ஒவ்வொரு பார்வையிலயும் பேச்சுலயும் அனுபவம் பளிச்சுனு தெரியுது.''

''இளம்பெண்களா இரண்டு புது முகங்கள். துடிப்புக்கு அஹானா. சோகத்துக்கு காயத்ரி. அதுலயும், அந்த அஹானா ஒரு சில கோணங்களில்... 'அடடே'ன்னு ஆச்சர்யப்படும்படியா குஷ்புவின் சாயல்!''

''பாத்திரங்கள் ஒவ்வொண்ணுமே அதனதன் பாதை மாறாம அமைக்கப்பட்டிருக்கிறது ஒரு ப்ளஸ் பாயின்ட். பக்கபலமாக, இளையராஜாவின் ரீரிகார்டிங். ரொம்பக் கவனமா செய்திருக்காரு.''

''நான் எதிர்பார்க்கவே இல்லை, இவ்வளவு இயல்பா இருக்கும்னு. அதே நேரத்துல, விறுவிறுன்னும் போகுது.''

படம் முடிந்து வெளியே வந்த போது நண்பர் கேட்டார் :

''நாளைக்கு ஒரு படம் பார்க்கப் போறேன். வரீங்களா?''

''இல்லை. இன்னொரு படம் பார்த்து, இந்தப் படம் ஏற்படுத்தியிருக்கிற எமோஷனைக் கெடுத்துக்க விரும்பலை.''

- சி.ஆர்.கே.







13

## கிருஷ்ணா டாவின்ஸி

# மாயக்குதிரை

பிளாக்கி குதிரையிடமிருந்து சூர்யாவுக்கு எப்படி ரேபிஸ் தொற்றிக் கொண்டது என்கிற கேள்விக்கு, எஸ்.பி. சண்முகத்திற்கு விடை கிடைத்து விட்டது. சூர்யாவின் உடலில் ஏதாவது காயம் இருந்திருக்க வேண்டும். அதன் வழியே குதிரையின் எச்சில் படிந்து அவன் உடலினுள் நுழைந்திருக்க வேண்டும். சுலபம்! நாயும் கடிக்கவில்லை. எதுவும் இல்லை. வெளியே யாரும் அறிய முடியாமல் இயற்கையாக நடந்து முடிந்து விட்ட நிகழ்ச்சி.

எஸ்.பி. சண்முகம் டாக்டர் அமானுல்லாவை விசாரித்த போது, சூர்யாவின் கையிலிருந்த அந்தக் காயத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். மேலும் விசாரணையில், ஷூட்டிங்கில் சூலம் கீறிய நிகழ்ச்சி பற்றி அறிந்து கொண்டார்.

அன்று மாலைத் தினசரிகளில் செய்தி வெளியானது.

**சூர்யாவின் மரணம் விசாரணை**

**குதிரைப் பயிற்சியாளர் திடீர் கைது**

**போலீஸ் விசாரணையில் வெளிப்படும் தகவல்கள்!**

பிரபல நடிகர் சூர்யாவின் எதிர்பாராத மரணம் பற்றிய புதிய தகவல்கள் பரபரப்பான போலீஸ் விசாரணையில் தெரிய வந்துள்ளன. சூர்யா தினமும் அதிகாலையில் பயிற்சி பெற்ற குதிரைக்கு ரேபிஸ் நோய் இருந்ததாகவும் அந்தக் குதிரையின் மூலமாக சூர்யாவுக்கு அந்நோய் பரவியதாகக் காவல் துறையினர் ஆதாரபூர்வமாகக் கண்டுபிடித்துள்ளனர். குதிரைப் பயிற்சியாளர் துரை என்கிற துரைவேலுவைக் காவல் துறையினர் கைது செய்துள்ளனர். அவருடைய அலட்சியம் காரணமாகவே சூர்யாவுக்குக் குதிரையின் மூலம் நோய் பரவியதாகக் காவல் துறை அதிகாரி குறிப்பிட்டுள்ளார். இதன் விவரம் வருமாறு...

ரங்கா அதை சுவாரஸ்யமாகப் படித்து முடித்து விட்டு, "முடிஞ்சது கதா! சே! சாவு எந்த ரூபத்துல வரும்னு கலியுகத்துல சொல்ல முடியறதில்லை."

அப்போது ரசிகர் மன்றத்து இளைஞர்கள் உள்ளே நுழைந்தார்கள். அமர்ந்து கொண்டார்கள்.

மேஜர் சுதாகரைப் பார்த்து ஒருவன், "என்ன ஸார் ஆச்சு?" என்றான்.

"நாங்க ஏதாவது கண்டுபிடிக்கறதுக்குள்ள போலீஸ்ல கண்டுபிடிச்சாச்சு. பாத்தீங்க இல்லை? குதிரைக்காரனை அரஸ்ட் பண்ணியிருக்காங்க..." என்றார்.

"இதெல்லாம் உண்மைதானா?" ஒருவன்.

"இல்லை, கண் துடைப்பு!" இன்னொருவன்.

"ரங்கா, அந்த மெடிஸன் லிஸ்ட்டை எடு."

ரங்கா ஒரு ஃபைலிலிருந்து எடுத்துக் கொடுத்தான்.

"இதப் பாருங்க. இந்த மருந்தெல்லாம் சூர்யாவோட ட்ரீட்மெண்டுக்குக் கொடுத்தது. இந்த ஸோடியம் பெனோபார்பிடோன் இருக்குதே, இது ஸெடேஷன். க்ளோர்ப்ரமெஸின் வலிப்புக்காகப் போடுவாங்க. இதோ இது இம்யூன் ஸிரம். ஸெம்பிள் டைப்...

அவர்கள் அதைப் புரியாமல் பார்த்து, "இதுக்கெல்லாம் ஆதாரம்?"

ரங்கா கொஞ்சம் எரிச்சலாக, "எல்லாம் ஸ்புட்னிக் ஆஸ்பத்திரியில கஷ்டப்பட்டு சேகரிச்சது. ஒண்ணு தெளிவாப் புரிஞ்சுக்குங்க. சூர்யா செத்துப் போனது ரேபிஸ்னாலதான்கறது ஆதாரமான உண்மை. பாயைப் பிறாண்டாதீங்க..."

ஒருவன் தீர்க்கமாக, "சரி, ஒத்துக்கறோம். குதிரைக்கு எப்படி அந்த நோய் வந்தது?" என்றான்.



''ஏன் உன் தாத்தா ரொம்ப வருத்தமா இருக்கார்?''

''பாட்டியைக் கல்யாணம் பண்றப்ப பார்த்த படத்தை, இப்ப டீ. வி. யிலே போடறப்ப சேர்ந்து பார்க்கப் பாட்டி உயிரோடு இல்லையே என்கிற வருத்தம்தான்!''

– வைகை

''சரிதான். இன்காரிஜிபிள். அதையும் விசாரிச்சாக்க. அந்த ஆள் துரை குதிரையை வீட்டுப் பின்னால கட்டுவானாம். அங்கே தான் நாய் கடிச்சிருக்குது...''

''கடிச்சிருக்குன்னு எப்படித் தீர்மானமாச் சொல்றீங்க?''

''தென், ஹவ் கம்! ஊகம். சாத்தியமான ஊகம். அவ்வளவுதான்...''

''ஸார்! அந்தக் குதிரைக்காரனுக்குப் பணம் கொடுத்து, போலீஸ்ல செட்-அப் பண்ணியிருக்காங்க!'' என்றான் ஒருவன்.

மேஜர் சுதாகர் நிதானமாக, ''இதோ பாருங்க. போலீஸ் விசாரணையில பல சமயங்கள்ல நீங்க சொல்றாப்ல 'ஸெட்-அப்' நடக்கத்தான் செய்யுது. அதுக்காக எல்லா விதங்களிலும் அவங்களை சந்தேகப்பட முடியாது. அடிப்படையில சில உண்மைகள் இல்லாம எதையும் நூறு சதவீதம் ஜோடிக்க முடியாது.''

''அந்தக் குதிரைக்காரன் மேலதான் ஸார் சந்தேகம். அவனுக்காக கோர்ட்ல வாதாட பெரிய லாயரைப் பிடிச்சிருக்காங்க. ஆனந்த்!''

ரங்கா புருவத்தை உயர்த்தி ''ஆனந்தா?'' என்றான். ஆனந்த் எனப்படும் சமீப காலத்திய பிரபலமான கிரிமினல் வக்கீல் அவனுடைய நண்பன்.

''எந்த ஆனந்த்? கிரிமினல் லாயர்? ஒரு யங் சாப்?''

''அவருதான்.''

''சுதா, அவன் என் ஃப்ரெண்டு.''

''சாதாரண குதிரைக்காரனுக்கு பெரிய லாயருக்கு ஃபீஸ் ஆயிரமாயிரமாக் கொடுக்க எப்படி ஸார் முடியும்?''

''அவனுக்குப் பின்னாடி ஆளுங்க இருக்காங்க.''

---

மேஜர் சுதாகர் ரங்காவிடம் திரும்பி, ''ரங்கா, அந்த ஆனந்தை ஒருமுறை பார்த்து விவரமெல்லாம் விசாரிக்கடு!'' என்றார்.

ரங்கா ஆனந்தை கோர்ட் சேம்பரில் சந்தித்த போது, அவன் எதிரே திடீரென்று பிரபலமாகிவிட்ட துரை கைகளைக் கட்டியபடி பணிவாக நின்று பொலபொலவென்று அழுது கொண்டிருந்தான்.

''அழுவாதய்யா! அதான் வெளியே வந்தாச்சல்லை? சும்மா இரு...'' என்றான் ஆனந்த். பிறகு ரங்காவிடம் திரும்பி, ''இதான் உங்காளு. துரைவேலு!''

''பெய்ல் கிடைச்சாச்சா?'' என்றான் ரங்கா ஆச்சர்யமாக.

''கத்துக்குட்டி வக்கீல் கூட வாங்குவான். பயங்கர வீக்கு. 299ல் ஃபைல் பண்ணியிருக்காங்க. நெக்லிஜன்ஸ்ல கொண்டு வரலாமான்னு அவங்களுக்கே குழப்பம். ஜெனரல் எக்ஸப்ஷன்ஸ்ல சதாய்ச்சு வெளியில கொண்டு வந்துட்டேன். என்னய்யா அராஜகம்! எழுபத்தாறு என்ன சொல்லுது...? ராத்திரி வீட்டுல சந்தேகமா சத்தம் கேக்குதுன்னு வைச்சுக்கோ. துப்பாக்கியை எடுத்துக்கிட்டு முழிச்சுக்கறோம். யாரோ போகிற நிழல் இருட்டுல தெரியுது. அடடா! திருடன்டான்னு நெனைச்சுக்கிட்டு சுட்டுடறோம். விளக்குப் போட்டுப் பார்த்தா அது வேலைக்காரன்! இது மர்டரா?'' என்றான் ஆனந்த்.

''நீதான் சொல்லணும்!'' ரங்கா சிரித்தான்.

''துரைவேலு பாவம், அப்பாவி! ரேபிஸாவது மண்ணாங்கட்டியாவது! துரை, நீ என்ன படிச்ச?''

''நாலாவதுங்க. எஜமானவே!''

''நாலாவது! இவனுக்கு என்னய்யா தெரியும் ரேபிஸ் பத்தி! மிஸ்டேக் ஆஃப் ஃபேக்ட். ஜட்ஜ் சிரிப்பாரு.''

துரை சடாரென்று அவன் காலில் விழுந்து பாதங்களைப் பற்றிக் கொண்டு, ''ஐயா, கண்கண்ட தெய்வமே!'' என்று உருக, ''எழுந்திருய்யா! ஃபீஸைக் கொடுக்கும் போது தெய்வத்தை நினைச்சுக்கோ! போ! போய்ட்டு புதன் கிழமை வந்து பாரு'' என்றான் ஆனந்த்.

(தொடரும்)

# மறியல் தொடங்கினார், ராஜேஷ் கன்னா!

●● பிழைப்புத் தேடி கிராமங்களை விட்டு மனிதர்கள் மட்டுந்தான் நகரங்களுக்குக் குடிபெயர்கிறார்கள் என்பதில்லை; யானைகளுந்தான்! சுதேச சமஸ்தானங்களை பட்டேல் சுதந்திர பாரதத்துடன் இணைத்த போது, அம்மன்னர்களுக்கு மான்யங்களை உறுதி அளித்திருந்தார். பின்னால் வந்த ஆட்சியாளர்கள் அவற்றை ரத்து செய்து விட, பல மன்னர்கள் அரண்மனைகள், யானைகள் போன்றவற்றைப் பராமரிக்க முடியாமல் தவிக்கிறார்கள். உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த பிஜ்னோர் மகாராஜாவுக்காக அவர் யானைகளைப் பராமரித்து வந்த முகமது அஷ்ராஃப், மன்னர் கைவிரிக்கவே, யானைகளுடன் தில்லி வந்தடைந்து யமுனைக் கரையில் குடியேறி கம்பெனிகளின் விளம்பரத்திற்காகவும், கல்யாணங்களில் ஊர்வலத்திற்காகவும் வெளிநாட்டினரை ஏற்றிக் கொண்டு வலம் வந்து உற்சாகப்படுத்தவும் யானைகளைப் பயன்படுத்தி வருகிறார். யானைகளால் வசதியாக வாழும் இவரைப் பார்த்து விட்டு மேலும் சிலர் பீகாரில் சோன்பூரில் நடக்கும் யானைச் சந்தையில் யானைகளை விலைக்கு வாங்கி வந்து இங்கு பிழைப்பு நடத்துகிறார்கள். போகப் போக தலைநகரில் ஒரு யானைக் காலனியே அமைந்து விடும் போலிருக்கிறது!

●● நான்கே வயதான ஹார்லீன் கௌர் என்ற குழந்தை, தில்லி பிரசன்டேஷன் கான்வெண்ட் சீனியர் செகண்டரி பள்ளியின் கீழ் இயங்கும் நர்சரிப் பள்ளியில் கே.ஜி. வகுப்பில் சேர மனு செய்திருந்தது. சில குழந்தைகளை மட்டும் இண்டர்வியூவுக்கு அழைத்த பள்ளி அதிகாரிகள், குழந்தை ஹார்லீனைப் பார்க்காமலேயே 'உனக்கு அனுமதி கிடையாது' என்று எல்லோருக்கும் அனுப்பும் ஒரு 'சைக்ளோஸ்டைல்' செய்த கடிதத்தை அனுப்பி விட்டார்கள்! ''தில்லி பள்ளிக் கல்விச் சட்டம் - 1973 இன்படி எல்லோரும் கல்வி பெற விரும்புவது ஓர் அடிப்படை சுதந்திரம். எக் காரணத்திற்காக எனக்குப் பள்ளியில் அனுமதி இல்லை என்று எனக்குத் தெரிய வேண்டும்'' என்று கேட்டிருக்கிறது அக் குழந்தை! பள்ளி அதிகாரிகளுக்கு ஹைகோர்ட் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது.

●● நிலக்கரி பற்றாக்குறையினால் பதர்பூர் அனல்மின் நிலையத்தின் ஐந்து ஜெனரேட்டர்களில் மூன்றை மூட, நாட்டின் தலைநகரில் மின்பற்றாக்குறை பெரிதளவில் உணரப்படும் என்று தெரிகிறது. தில்லி மின் விநியோக நிறுவனம் மாதத்திற்கு ரூ 38 கோடிக்கான மின்சக்தியை மின்நிலையத்திலிருந்து பெறுகிறது. ஆனால் மாதத்திற்கு ரூ 5 கோடி என்ற அளவில்தான் பணம் கொடுத்திருக்கிறது. ஏறக்குறைய ரூ 2500 கோடி பாக்கி வைத்திருக்கிறது. இதனால் பதர்பூர் அனல்மின் நிலையம் ரயில்வேக்கு பாக்கி வைத்திருக்கும் தொகையைக் கொடுக்க முடியாமல் போக, நிலக்கரி கொண்டு வருவதையே ரயில்வே நிறுத்தி விட்டது. இயற்கை விளைவிக்கும் கோளாறுகளை விட, இப்படி மனிதர்கள் உண்டாக்கும் குளறுபடிகள் அதிகம்!

●● ஏப்ரல் 90-இல் தீக்கிரையான விக்ஞான் பவன், இன்று கம்பீரமாகப் புது மெருகு பூண்டு காட்சி தருகிறது. மறுபடி நெருப்பால் ஆபத்து இருக்கக் கூடாது





என்பதற்காகத் தீ அணுகாத கதவு, ஜன்னல்களும், நாற்காலிகளும், விரிப்புகளும் பொருத்தப்பட்டுள்ளன. ரூ. 25 கோடி செலவில் தயாராகும் இக் கட்டடத்தைப் புதுப்பிக்க 600 பேர் உழைத்து வருகிறார்கள். நவீன விஞ்ஞான முறைப்படியிலான சவுண்ட் சிஸ்டம், வீடியோ சிஸ்டம், ஃபாக்ஸ் வசதி க்ளோஸ்டு சர்க்யூட் டீ.வி., எஸ்கலேட்டர்கள் யாவும் அமைக்கப்பட்டு வருகின்றன. இனி சர்வதேச அளவிலான மாநாடுகள், செமினார்கள், கலை நிகழ்ச்சிகள் இங்குதான்.

●● ஜோர்பாக்கிலுள்ள B.K. தத் காலனியில், தில்லி வீட்டு மனை அபிவிருத்திக் கழகத்துக்குச் சொந்தமான நிலத்தில் பல அடுக்கு மாடிக் கட்டடம் கட்டிக் கொண்டு, அவ்வப்போது பக்கத்தில் கிடைக்கும் மேலும் சில நிலங்களையும் ஆக்கிரமித்துக் கொண்டு வாழ்பவர்கள், ஏழைகள் அல்ல; நடுத்தர வர்க்கத்தையும், பணக்கார வர்க்கத்தையும் சேர்ந்தவர்கள். சட்ட வரம்பை மீறி அரசின் நிலத்தை ஆக்கிரமித்த இக் கட்டடத்தை இடிக்க வென புதுதில்லி முனிசிபல் கார்ப்பரேஷன் கிளம்பிய போது, இந்த காலனிவாசிகள் இத் தொகுதி எம்.பி.யான ராஜேஷ்கன்னாவை அழைத்து வந்து மறியல் துவங்கினர். இடிக்கவிருந்த கட்டடத்தின் வாயிலில் அமர்ந்து கொண்டு இனி என்னை மீறித்தான் எதுவும் நடக்க முடியும் என்று கன்னா முழங்க, முனிசிபல் அதிகாரிகள் திரும்ப வேண்டி வந்தது. இந்த மாதிரி சட்ட வரம்புகளை மீறிய காலனிகள் நூற்றுக்கணக்கில் அரசியல் வாதிகளின் ஆசியுடன் தொடர்வதால் தில்லியின் ஜனத்தொகை இன்று 91 லட்சம்!

– ராஜீவி நரசிம்மன்

## சிறையில் பூத்த காதல்!

ஒரிஸ்ஸா, தென்கனால் சிறையில் அடைபட்டிருந்த 32 வயது 'போகா பரிதா'வுக்குத் தண்டனை முடிந்த பிறகும் விடு செல்ல மனமில்லை! காரணம், சிறையிலிருந்த ஒரு பெண் வார்டரை இவர் காதலித்ததுதான்! வற்புறுத்தலின் பேரில் வேறு வழியின்றி சிறையை விட்டு வெளியேறிய இவர், ஐடியா செய்து, ஒரு நாள் இரவு ஜெயிலின் அறைக்குள் திருட்டுத்தனமாக நுழைந்தார்! காவலர்கள் கொடுத்த புகாரின் பேரில் கைது செய்யப்பட்டு 'தென்கனால்' சிறைக்கே திரும்பவும் கொண்டு செல்லப்பட்டார்! இவர் விரும்பியது நடந்து விட்டது! ஆனால் சிறைக்குப் போன பின்தான் தெரிந்தது, அந்தப் பெண் வார்டர் வேறு ஊருக்கு மாற்றலாகிப் போய் விட்டார் என்பது!

தகவல் : சம்பத்குமாரி
ஆதாரம் : "தி வீக்"



"உங்க பிறந்தநாளுக்கு வழக்கம் போல் இந்தத் தடவையும் ஆயிரம் கைதிகளை விடுதலை பண்ணலாம்னு பார்த்தால் முடியாது போலிருக்கு தலைவரே!"

"ஏன்?"

"இது மாதிரி அடிக்கடி விடுதலை பண்ணினதால் ஜெயிலில் இப்போ ஐந்நூறு கைதிகள்தான் இருக்காங்க..."

–வி. கெ. குமார்

"சினிமா நட்சத்திரங்களுக்கு
கூந்தல் பிரச்சனையே
இல்லைனு யார் சொன்னது?

என்னோட கூந்தல் கூட
நுனில உடைஞ்சு போய்
சரியில்லாமத்தான்
இருந்தது...



## ...நான் அதுக்கு ஸ்பெஷல் கவனிப்பு கொடுக்கறவரை. அதுவும் வீட்டிலேயே!"

### "ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மெண்ட்டில் உள்ள புரோட்டீன் & பேந்தனால் தரும் இரட்டைப் பராமரிப்பைக் கண்டு கொண்டேன்".

"எனக்கு நல்லா ஞாபகம் இருக்குது என்னோட கூந்தல் நுனியெல்லாம் பிளவுபட்டிருந்தது. நல்லவேளையா அதை வீட்டிலேயே சரிபண்ண ஒரு நல்ல பொருளை கண்டுபிடிச்சிட்டேன். புதிய ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மெண்ட். இது புரோட்டீன் கூட பேந்தனால்ங்கற ஒரு விசேஷ பொருள் சேர்ந்த 2 இன் 1 ஷாம்பூவாக்கும்.

உங்களுக்குத் தெரியுமா பேந்தனால் கூந்தலின் ஒவ்வொரு இழையிலும் ஊடுருவி உள்ளே வேலை செய்கிறது. அதனால கூந்தலோட வெளிப்புறம் அற்புதமான பளபளப்பு பெறுது. நிஜமாவே ஸலோன் அழகு. நீங்களும் இதப் போட்டுப் பாருங்க. அப்புறம் பாருங்க இது எப்படி உங்கள் கூந்தல அழகா மாத்துதுன்னு."

**புரோட்டீன் & பேந்தனால் இரட்டை பராமரிப்பு**
**உள்ளே ஊட்டமளித்து தரும் உறுதி.**
**வெளியில் அற்புதமான பளபளப்பு**



பிளவுபட்ட நுனிகள் கூந்தல் அதிகமாக பழுதடைந்திருப்பதன் அறிகுறி. எனவே இதில் கவனம் செலுத்தா விட்டால் கூந்தல் உதிர்ந்துபோக வாய்ப்புண்டு.

ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மெண்ட் இரு நிலைகளில் செயல்புரிகிறது. பேந்தனால் எனும் சாதனைக் கண்டுபிடிப்பு கூந்தலினுள் ஊடுருவி ஊட்டமளிக்கிறது. அதே சமயம் ஒரு விசேஷ ஃபார்முலா கூந்தலின் வெளிப்புறம் மிருதுத் தன்மையை அளிக்கிறது. இதனால் ஒவ்வொரு இழையும் அடிமுதல் நுனிவரை பளபளக்கிறது. தொடர்ந்து உபயோகித்தால் கூந்தல் சேதமடைவது வெகுவாய் குறையும்.





**பலன்கள்:** பிளவுபட்ட நுனிகள் பிரச்சனை மறையும். உறுதியான, மென்மையான, பளபளப்பான, அழகாய் படியும் கூந்தல். நிஜமாகவே ஸலோன் அழகு கூந்தல்.

| உங்கள் கூந்தலுக்கு தேர்ந்தெடுங்கள் நிபுணர் பராமரிப்பு | | |
|---|---|---|
| ஷாம்பூ வகை | கூந்தல் வகை | தரும் பலன்கள் |
| [illegible] ஸன்ஸில்க் புரோட்டீன், பேந்தனால் உள்ளது | பிளவுபட்ட நுனிகள் சேதமான கூந்தல் | பிளவுபட்ட நுனிகளை சரி செய்ய உதவுகிறது |
| பச்சை ஸன்ஸில்க் விட்டமின் E, பேந்தனால் உள்ளது | உறுதியற்ற சாதாரண கூந்தல் | கூந்தலுக்கு உறுதி தருகிறது |
| [illegible] கோ கண்டிஷனர், பேந்தனால் உள்ளது | உலர்ந்த சொரசொரப்பான சிக்கலான கூந்தல் | சேதத்திலிருந்து காத்து கூந்தலை பாதுகாக்கிறது |

Meenak.

# ஸன்ஸில்க்
## ஸலோன் ட்ரீட்மெண்ட்

**அழகான கூந்தலுக்கு நிபுணர் பராமரிப்பு.**

தேர்ந்தெடுத்த நகரங்களில் கிடைக்கிறது

HTA 1634 TAM

# ஜிங்குலு

ஆர். சூடாமணி

"ஜிங்குலுக் குட்டி! ஜிங்குலுக் கண்ணா! இன்னிக்கு என்னல்லாம் பண்ணினே?"

சிரித்துக் கொண்டு தாவும் சின்ன உடல். அள்ளிக் கொள்ளும் அப்பாக் கரங்கள்.

"நாளொருத்தி இங்கே நாளெல்லாம் இதோடு கூட உயிரை விடறேன். இதுவானா அப்பாவைக் கண்டாத்தான் தாவிக்கிட்டு ஓடுது!" என்னும் மனைவியின் செல்லப் புகார் எப்போதுமே குணாளனின் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கும்.

"ஆமாம், என் ஜிங்குலுக் குட்டி டாடிப் பாப்பாதான். அப்படித்தானேடா ஜிங்குலு?"

"டாடிப் பாப்பா!" என்று ஜிங்குலு என்னும் சுரேஷ், அப்பாவின் கழுத்தை இன்னும் இறுகக் கட்டிக் கொண்டான்.

"ஆபீஸ்லேருந்து வந்து டிரெஸ்ஸை மாத்தலே, காப்பி டிபன் சாப்பிடலே. அதுக்குள்ள குழந்தையைத்தான் கொஞ்சியாகணும் போல் இருக்கு!"

"இவன்தான் என் காப்பி டிபன். இவனைக் கையில் எடுத்ததுமேதான் பசியெல்லாம் பறந்து போயிடுதே! அப்படித்தானேடா ஜிங்குலு?"

"நல்லதாப் போச்சு. இன்னிக்கு டிபன், காப்பி தயாரிக்கிற வேலை எனக்கு மிச்சம்."

"ஐயையோ அமுதா, அப்படியெல்லாம் பண்ணிடாதே! பசி உயிர் போகுது. முதல்ல காப்பியைக் கொண்டா."

"பாப்பாக்கும் காப்பி!" என்று சுரேஷ் உத்தரவிட்டான்.

"காப்பி கிப்பின்னா பாப்பாக்கு உதைதான்."

"ஹ்ம்ம்ம்... டாடி, காப்பி வேணும்..."

"குழந்தையை அழ விடாதே அமுதா. கொஞ்சம் போல காப்பி கொடுத்தா என்ன கெட்டுடும்?"

"இதோ பார் சுரேஷ், உனக்குக் காப்பி வேணாம். அம்மா சொல்றதைக் கேளு."

"ஊஹூம். டாடி..."

"அமுதா, ப்ளீஸ், ஒரே ஒரு வாய், குழந்தையைச் சமாதானப்படுத்த."

"எப்படியோ போங்க அப்பாவும் பிள்ளையும்!" அமுதா அகன்றாள்.

"காப்பி வரப் போகுதே! ஜிங்குலுவுக்கும்தான்."

"ஹையா!"

இரண்டு வயதுக் குழந்தை. இன்னும் ஆறு மாதங்களில் ப்ரீ ஸ்கூல் போக வேண்டும்.

"ஜிங்குலு ஸ்கூலுக்குப் போய் நல்லா படிப்பானே!"

"ஜிங்குலு டாடியாட்டம் ஆபீஸ் போவான்."

"அட சமத்து!" மகனை உச்சிமோந்து ஒரு முத்தம்.

"இந்தாங்க காப்பி. சுரேஷ், இதோ, இது உனக்கு."

சின்ன தம்ளரில் பாதிக்கும் கீழே காப்பி ஒட்டிக் கொண்டிருந்தது.

"இத்தனூண்டா..."

"குடிக்கிறதானா இதைக் குடி. இல்லாட்டி இது கூடக் கிடையாது சுரேஷ்."

அம்மா அந்த அதட்டல் குரலில் பேசினால் மீற முடியாது என்று சுரேஷுக்குத் தெரியும். அம்மா 'சுரேஷ்' என்று எப்போதும் அழைப்பதே அவள் கண்டிப்பைக் காட்டுகிறது. ஆசையாய் செல்லப் பெயரால் 'ஜிங்குலு' என்று அழைப்பது அப்பாதான்.

அப்பா கோபிக்கும் சந்தர்ப்பங்களும் உண்டு. அதை அவன் புரிந்து கொள்ள அவருடைய கடுமையான முகமோ உரத்த குரலோ கூட அவசியமில்லை. அந்தச் சமயங்களில் அவனை 'சுரேஷ்' என்று அவர் அழைப்பதே அவர் கோபத்தின் அறிகுறி.

சமையலறையில் வேலையாக இருக்கும் போது குழந்தை அங்கு வந்து தொந்தரவு செய்வதை அமுதா விரும்புவதில்லை. காலையில் அவனுக்கு ஆகாரம் கொடுத்தபின் "டாடியோட விளையாடிக்கிட்டிரு" என்று குணாளனுடன் விட்டு விட்டுத் தன் வேலையைக் கவனிக்கச் செல்வாள். "ஜிங்குலுக் கண்ணு, உன் பொம்மைப் புத்தகம் எங்கே?" என்று குழந்தைக்குப் பராக்குக் காட்டியபடியே அவன் செய்தித்தாள் படிப்பான். செய்திகள் மிக உஷ்ணமாயிருக்கும் நாட்களில் கவனம் குழந்தையிடமிருந்து விலகுவதும் உண்டு.

அன்று அப்படித்தான் விலகியிருக்க வேண்டும். மடியில் அமர்த்திக் கொண்டிருந்த சுரேஷ் எப்போது இறங்கிப் போனானோ? சமையலறையில் கறிகாய் நறுக்கி விட்டு ஒரு தாழ்வான மேடையில் அமுதா வைத்திருந்த கத்தியை மிக சுவாரஸ்யமாய் எடுத்து, இப்படியும் அப்படியுமாய்த் திருப்பி, அதன் உலோக வெள்ளை சூரிய ஒளியில் மின்னவிடுவதை அழகு பார்த்தான்.

"இந்தக் கத்திதானேம்மா கதையில கொலங்கு வாலை வெட்டிச்சு?"

காஸ் அடுப்பிலிருந்து சடாரென்று கவனம் சிதறித் திரும்பிப் பார்த்த அமுதா, "ஏய்,

சின்னக் குழந்தைகளெல்லாம் கத்தியை வச்சுக்கிட்டு விளையாடக் கூடாது. உடனே அதைக் கீழே வை'' என்று அதட்டினாள்.

சுரேஷ் அவளைப் பொருட்படுத்தாமல் ''வாலு போச்சு கத்தி வந்துது டும் டும் டும்!'' என்றான் பரவசத்துடன்.

அமுதா கத்தியைப் பிடுங்க வருவதற்குள் அறைக் கதவிடை குணாளன் தென்பட்டான்.

''டே சுரேஷ், இப்போ கத்தியைக் கீழே வைக்கிறியா இல்லையா?''

உரத்த குரலில் உத்தரவு. சுரேஷ் அலண்டு போய்த் தந்தையை நிமிர்ந்து பார்த்தான். அப்பாவின் கோபம் புரிந்தது. கையிலிருந்து கத்தி நழுவியது. மோவாய் அலுங்க, உதடுகள் குவிந்தன. இன்ன ஊற்றிலிருந்து என்று புரியாமல் இமை நேரத்தில் கண்களில் நீர் பெருகியது. பழக்கமான, ஆசையான டாடி வேண்டும் அவனுக்கு. குரல் கேவிக் கேவி வந்தது.



''டாடி... டாடி... கலேஸ் சொல்லாதே... ஜிங்குலு சொல்லு...''

பொங்கிப் பொங்கி வந்த துக்கம்.

குணாளன் குழந்தையைக் கரங்களில் அள்ளிக் கொண்டான்.

**கா**லண்டர் எட்டு முறை மாறி விட்டது.

பத்து வயதுக்கு சுரேஷ் நல்ல வளர்த்தி. ஏறக்குறைய அமுதாவின் உயரம் வந்து விட்டான். தரத்துக்குப் பெயர் போன ஒரு ஹையர் செகண்டரி பள்ளியில் ஐந்தாம் படிவம் படிக்கிறான். படிப்பில் படுசுட்டி. பரீட்சைதோறும் முதலிடத்துக்கு இவனுக்கும் பிரபு என்ற இன்னொரு பையனுக்கும்தான் போட்டி. இவன் சரித்திரத்தில் புலி என்றால் அவன் தமிழில். அவன் விஞ்ஞானத்தில் மார்க் குவித்தால் இவன் கணிதத்தில். இருவருக்குமே வகுப்பில் 'ரசிகர் குழாம்' உண்டு.

''என் ஜிங்குலு பெரிய கணக்கு ஜீனியஸாய் வரப் போறான், தெரியுமா?'' என்று குணாளன் அவன் தலைமுடியைச் செல்லமாய் அளையும் போது, இப்போதும் சுரேஷ் குழந்தை போல் அப்பாவைக் கட்டிக் கொள்வான்.

''பிள்ளை ஒரு வளரும் ராமானுஜனாக்கும்!'' என்று அமுதா சிரித்த போதும் உள்ளூற அவளுக்கும் பெருமைதான். காட்டிக்கொள்ள மாட்டாள்.

''இல்லாம என்ன? ராமானுஜன் மட்டுமா? அவருக்கு முன்னே இருந்த ஆர்ய பட்டர், பாஸ்கரன் எல்லாரும் இப்ப இவனுக்குள்ளேதான்!''

''ரொம்ப புகழாதீங்க, கண் பட்டுடப் போகுது!''

''தாயார் கண்தான் படும். தகப்பனார் கண்ணுக்கு தோஷமே கிடையாது, தெரியுமா? போன பரீட்சையில் ஜிங்குலு



''பெண் குழந்தை பிறந்தவுடனே அரசுத் தொட்டில்ல கொண்டு போட்டுட்டியே, ஏன்?''

''நம்ம சாகடிச்சோம்னா அது கொலையாம். அதனாலதான்!''

- லேனாதாசன்

கணக்கில் நூத்துக்குத் தொண்ணூத்தெட்டு மார்க் வாங்கினானாக்கும்!''

''மிச்ச ரெண்டு மார்க்கைச் சாப்பிட்டுட்டானா? ரொம்ப பசியா?''

''பாருங்க டாடி! இந்த அம்மாவே இப்படித்தான். நான் எவ்வளவு நல்லா செஞ்சாலும் திருப்தியில்லே. அம்மா, அந்தப் பிரபுவுக்கு எண்பத்தாறு மார்க்தான் கிடைச்சுது, தெரியுமா?''

''வருத்தப்படாதேடா ஜிங்குலுக் கண்ணா, நீ எவ்வளவு கெட்டிக்காரன்னு டாடிக்குத் தெரியும்.''

''என் நல்ல டாடி!''

சில நாட்கள் ஸ்கூல் பஸ் வந்து ஒலி எழுப்பும் வரை கூட இந்தக் கொஞ்சல் படலம் தொடரும்.

ஹாரன் ஒலி கேட்டதுமே சுரேஷ் வெள்ளைச் சீருடையும் புத்தகப் பையுமாய் ''டாட்டா டாடி! டாட்டா அம்மா!'' என்று கூவிக் கொண்டே ஜோடு சப்திக்க வாசலுக்கு ஓடுவான்.

**அ**ன்று மாலை பள்ளியிலிருந்து திரும்பிய போது புத்தகப் பையைத் தலை மேலிருந்து வழிய விட்டவாறு நுழைந்த மகனை அமுதா ஆச்சரியத்தோடு பார்த்தாள்.

''வந்துட்டியா சுரேஷ்? பஸ் வந்த சப்தமே கேக்கலையே?''

''பஸ் ப்ரேக் டௌன்மா. நாளைக்கு ஸ்கூல் பஸ் கிடையாது, பையன்களெல்லாம் அவங்களாவே வந்துடணும்னு ப்ரின்ஸி சொல்லிட்டார்.''

''இப்ப எப்படி வந்தே?''

''சைக்கிள் ரிக்ஷால. ரிக்ஷாக்காரர் வாசல்ல நிக்கறார். பணம் கொடுத்துட்டு வந்து எனக்கு டிபன் கொடும்மா. ரொம்ப பசிக்குது.''

**ம**றுநாள் காலை குணாளன் தன் ஸ்கூட்டரில் சுரேஷைப் பள்ளிக்கு அழைத்துச் சென்றான். கட்டட வாசலில் ஸ்கூட்டரை நிறுத்தியதுமே ''அதோ சுரேஷ் வந்துட்டான்!'' என்று உற்சாகமாய்க் கூவிக் கொண்டு நாலைந்து சிறுவர்கள் ஓடி வந்தார்கள். தன் மகனுக்கு எத்தனை மவுசு என்ற பெருமிதம் குணாளனுக்கு.

சுரேஷ் குதித்துக் கீழே இறங்கினான். ''இவங்கள்ளாம் என் ஃப்ரெண்ட்ஸ் டாடி!'' என்றான் பெருமையாக.

''என் டாடி கூட என்னை இன்னிக்கு ஸ்கூட்டர்லதான் கொண்டு வந்து விட்டார்டா!'' என்று ஒரு நண்பன் அறிவித்தான்.

''நான் உள்ளே போறேன் டாடி! டாட்டா!''

''டாட்டா ஜிங்குலு! சாயங்காலம் அழைச்சிட்டுப் போக மறுபடி வரேன்.''

ஸ்கூட்டரைத் திருப்பிக் கொண்டு குணாளன் சென்று தெருக்கோடியை அடைந்த போது, பள்ளி திசையிலிருந்து உரத்த சிரிப்புச் சப்தம் நாலைந்து குரல்களில் ஆரவாரமாய்க் கேட்டது. சிறுவர்களெல்லாம் ஏதோ பேசி மகிழ்கிறார்கள் போல் இருக்கிறது.

மாலையில் அலுவலகத்திலிருந்து சீக்கிரமே ஸ்கூட்டரில் கிளம்பிப் பள்ளிக்கு வந்த போது, சுரேஷ் வீட்டுக்குப் போய் விட்டான் என்ற தகவல் கிடைத்தது. ஒன்றும் புரியாமல் குணாளன் வீட்டுக்கு விரைந்தான்.

''குழந்தை வந்துட்டானா?'' என்றான் கவலையோடு மனைவியிடம்.

''அவன் என்னமோ தலைவலின்னு சொல்லிட்டு மத்தியானமே வந்துட்டான். யூனிஃபார்ம் கூடக் கழட்டலே. அப்பலேருந்து ஒண்ணும் பேசாம, சாப்பிடாம, அப்படியே 'உம்'முனு உக்காந்திருக்கான்'' என்றாள் அமுதா.

குணாளன் உள்ளே விரைந்தான். அமுதா சொன்னது போலவே சுரேஷ் சுருண்டு ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். முகம் ஜிவு ஜிவுத்துச் சிவந்திருந்தது. தந்தையின் காலடியோசை கேட்டவுடன் அந்த முகம் நிமிர்ந்தது. கண்கள் இரண்டும் இரு பெரும் ஆள் காட்டி விரல்களாகத் தந்தையை நோக்கிக் குற்றம்சாட்டின.

''என் ஸ்கூல்ல வந்து ஏன் டாடி என்னை ஜிங்குலுன்னு கூப்பிட்டீங்க?''

இள நெஞ்சில் காலை நிகழ்ச்சி இன்னும் நெருப்புத் துண்டாய் ஒட்டிக் கொண்டிருந்தது.

''ஏ, உன் பேர் ஜிங்குலுவாடா?''

''உன் டாடி உன்னை அப்படித்தான் கூப்பிடுவாரா?''

''டே ரவி, சுரேஷ் பேரு ஜிங்குலுடா!''

''ஜிங்குலு!''

''டே ஜிங்குலு!''

''ஹை ஹை ஜிங்குலு!''

''ஏ ஜிங்குலூஊஊஊ!''

பெருத்த ஆரவாரச் சிரிப்பு.

''என் ஃப்ரெண்ட்ஸெல்லாம் எப்படிப் பரிகாசம் பண்ணிச் சிரிச்சாங்க தெரியுமா? நான் படிப்பில் கெட்டிக்காரன்னு என்னை ஒசத்தியா நெனைச்சிருந்தவங்க அப்படிச் சிரிச்சாங்க. அந்தப் பிரபு வேற பின்னாலேருந்து கேட்டுட்டான். ஏற்கெனவே நான் மாத்ஸில் அவனை விட நிறைய மார்க் வாங்கிட்டேன்னு பொறாமை. இதைச் சாக்காய் வச்சுக்கிட்டு என்னை ஜிங்குலு ஜிங்குலுன்னு ரொம்ப கலாட்டா பண்ணிட்டான்...''

பேசப் பேசக் குரலில் அழுகை சேர்ந்து கொண்டிருந்தது. குணாளன் அதிர்ந்து போனான். தன் குழந்தை மட்டுமாக இருந்தவன், இப்போது அவனுக்கென்று ஒரு தனி இருப்பும் உள்ளவனென்பது எப்படி மறந்து போயிற்று?

சிறுவன் முகத்தில் கோபம், அவமானம், அப்பா துரோகம் செய்து விட்டார் என்பது போன்ற ஆத்திரத் துக்கம்.

''டாடி... நீங்க என்னை தனியாயிருக்கறப்ப... எப்படி வேணும்னாலும் கூப்பிடுங்க. ஆனா... என் ஃப்ரெண்ட்ஸ் முன்னாலே...''

பொங்கிப் பொங்கி வந்த துக்கம்.

குணாளன் மகனைக் கரங்களில் அள்ளிக் கொண்டான். ''சுரேஷ்னே கூப்பிடறேன்டா ஜிங்குலு'' என்றான்!



''அந்தப் பத்திரிகை ஆசிரியர் தான் ஒரு சினிமாக்காரர்ங்கிறதை நிரூபிச்சிட்டார்.''

''எப்படி...?''

''இரண்டாவது இதழ் புத்தகம் வெளிவரும்போது, 'வெற்றிகரமான இரண்டாவது வாரம்'னு விளம்பரப் படுத்தியிருந்தாரே!''

- சீர்காழி வி. ரேவதி

# பா
# ல
# ம்

●● புலவர் கீரன் நிகழ்த்திய ஆன்மீகத் தொடர் சொற்பொழிவுகளின் ஆடியோ கேஸட்டுகள் வைத்திருக்கும் அன்பர்கள் தொடர்பு கொள்க. தரமான முறையில் பதிவு செய்யப்பட்ட கேஸட்டுகளை உரிய சன்மானம் தந்து வாங்கிக் கேட்க ஆவலாய் உள்ளேன்.

- டாக்டர் ஸ்ரீதரன், ஆர்.,
P.O. Box 11414
DIBBA, FUJAIRAH, UAE

●● எனக்கு P.S.R. மூர்த்தி எழுதிய POWER SYSTEM OPERATION AND CONTROL (MCGRAW HILL PUBLICATION) என்ற புத்தகம் உடனடியாகத் தேவை. உரிய விலை தரத் தயார்.

- கே. ராஜா,
26, நரசியர் தெரு,
பழையவண்ணாரப்பேட்டை,
சென்னை - 600 021.

●● உடல் ஊனமுற்ற 52 வயது பெண்மணிக்கு வீட்டு வேலைகளில் உதவியாக இருக்க 40 வயதுக்கு மேற்பட்ட ஆதரவற்ற பெண்மணி தேவை. உணவு - உடை - இருப்பிடம் தந்து எதிர்காலத்துக்கும் தக்க வழி செய்து கொடுக்கப்படும்.

- என். காமகோட்டி,
10, போயஸ் ரோடு,
4 வது தெரு,
வன்னிய
தேனாம்பேட்டை,
சென்னை - 600 018.



●● எனது முதல் நூல் ''கவியரங்கில் கம்பன்'' ஒரு பிரதியும் என்னிடம் இல்லாத காரணத்தால் மறுபதிப்பு போட இயலவில்லை. இந்தப் புத்தகம் வைத்திருப்பவர்கள் யாரேனும் அனுப்பி உதவினால் நன்றியுடையவனாய் இருப்பேன்.

- அரு. நாகப்பன்,
17, வடக்குச் சேனியர் தெரு,
காரைக்குடி - 623 001.

●● கனடாவில் தயாராகும் தமிழ்த் திரைப்படக் களஞ்சிய நூல் தொகுதிக்குத் தமிழ் சினிமா சம்பந்தமான ஆதாரக் குறிப்புகள், நூல்கள், சினிமா பாட்டுப் புத்தகங்கள், கதை-வசன நூல்கள், 1986-க்கு முந்தைய சினிமா பத்திரிகைகள் எல்லாம் தேவை. உரிய மதிப்புக்குரிய பணம் வழங்கப்படும். தனிப்பட்ட முறையில் அனுப்ப முடியாதவர்கள் பெரிய புத்தகக் கடைகள் அல்லது நூல் வெளியீட்டாளர்கள் மூலம் அனுகலாம்.

— REFLEX PRINTING
1108 BAY STREET.
TORONTO, ONT M5S ZW9
CANADA

●● பறவைகள் வளர்க்க மிகவும் ஆசை. வளர்ப்புப் பறவைகள் பற்றிய விவரங்கள் அறிந்தவர்கள் தொடர்பு கொள்ளுங்களேன், பிளீஸ்!

- டி. ஆர். வி. ஸ்டாலின்,
த/பெ டி. ஆர். விஸ்வநாதன்,
1, அம்பலத்தாடி மடம் தெரு,
சிதம்பரம் - 608 001.

●● தினமும் மாலை 6:30 முதல் 8:30 வரை கோவையில் ஆசிரியர் ஒருவர் மூலமாக சமஸ்கிருதம் நேரில் கற்றுக் கொள்ள விரும்புகிறேன். கட்டணம், இதர விவரங்கள் தெரிவிக்க வேண்டுகிறேன்.

- இரா. இராமச்சந்திரன்,
134, எம்.டி.பி. சாலை,
கோயமுத்தூர் - 641 034.

●● கல்கத்தா, ஹெளராவில் எங்களுக்குப் பக்கத்து வீட்டில் இருந்த ராஜி மாமியின் தற்போதைய விலாசம் எவருக்கேனும் தெரிந்தால் தயவு செய்து எழுதவும். பதினேழு வருஷங்கள் ஆகிவிட்டன மீண்டும் சந்திக்க ஆவல்.

- ஈஸ்வரி ராமச்சந்திரன்,
F 26, டால்மியா காலனி,
டால்மியாபுரம்,
திருச்சி - 621 651.

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்.)



# பொன்னுமணி

ஆஹா, சந்தோஷமாகப் பாராட்ட ஒரு படம் கிடைத்ததே என்று நினைத்தால், முந்திரிக்கொட்டை மாதிரி சில குறைகள் தலைநீட்டுகின்றன. முதலில் அவற்றைப் பார்த்து விடலாம்.

1. சின்ன வயசிலேயே 'உனக்கு நான்; எனக்கு நீ' என்று அக்ரிமெண்ட் போட்டவர்களுக்கிடையே இன்டர்வல் வரைக்கும் ஒரு பிரச்னையும் வராதது, பின்னால் வரப் போகிற பூதாகாரத்தை வெகு சுலபமாக இனம் காட்டி விடுகிறது. எதிர்பார்த்த சஸ்பென்ஸ். எனவே ஏமாற்றம்.

2. படம் முடிந்தாக வேண்டிய அவசரத்துக்காக, திடீரென்று அந்த வெற்றிலைக்காரி முளைத்து, 'என்ன நடந்ததுன்னா...' என்று பிளாஷ்ஃபேக்'குவது சறுக். இளைமேக்ஸை அத்தனை இயற்கையாக வைக்க முடிந்தவருக்கு இந்தத் துக்கடா விஷயத்தில் ஏன் தடுமாற்றம்?

3. சித்தபிரமை பிடித்த பெண்ணுக்கு, சிவகுமார் வேறு மாப்பிள்ளை பார்க்கும் போது ஆய், ஊய் என்று எகிறும் கார்த்திக், அவள் கர்ப்பமாய் இருப்பது தெரிந்ததும், கெடுத்தவனைத் தேடிக் கட்டி வைக்க முனைவது, உணர்ச்சிமயமாகவெல்லாம் இல்லை. ஏனோதானோவாகி விட்டது.

போதும். இனி பாராட்டலாம். சின்னச் சின்ன சம்பவங்களைக் கவிதையாக்கும் முயற்சியில் ஆங்காங்கே உதயகுமார் விஸ்வரூபம் எடுத்திருக்கிறார்.

மாப்பிள்ளை கார்த்திக்கின் அதிரடிச் சமையலை ஆஹா ஓஹோ என்று ரசித்துச் சாப்பிட்டு விட்டு சிவகுமார் செல்ல, பின் ஒரே ஒரு வாய் கார்த்திக் ருசித்துப் பார்த்து அஷ்டகோணல் ஆகும் முகம்... அதன்பின் கண்ணில் காட்டும் உருக்கம்...

முற்றிலும் மாறுபட்ட காதல் கோணத்தில் புதுமுகம் சௌந்தர்யா. கார்த்திக்கை என்ன பாடுபடுத்துகிறார்? உப்பு மூட்டை ஏற்றிப் போகச் சொல்லி சிணுங்குவதும், நடு ராத்திரி முத்தம் கேட்டு கலாட்டா பண்ணுவதும், விளம்பர மாடல்களின் போட்டோக்களைக் கத்தரித்து தபாலில் அனுப்பி, அதே போல் பட்டிக்காட்டு மாமனை ட்ரெஸ் பண்ணிக் கொண்டு ரயில்வே ஸ்டேஷனுக்கு வரச் சொல்லி உத்தரவிடுவதும்... சபாஷ்! சரியான போட்டி!

மாங்காத் தலையா, மண்ணாங்கட்டித் தலையா என்பது போன்ற அபத்தக் காமெடிகளை ஓரங்கட்டி, ஜெட் வேகத்தில் வடிவேல் முன்னுக்கு வருகிறார். வாழ்த்தி வரவேற்கத் தயாராகுங்கள்.

படத்தின் ஜீவனில் பேர்பாதி இசை. ராஜாவின் ராஜாங்கத்தில் முழு நீள மயக்கும் யாத்திரை.

சமீபத்திய சறுக்கல்களுக்குப் பின், உதயகுமார் உத்வேகத்துடன் எழுந்து நின்று சல்யூட் அடித்திருக்கிறார்.

மிலிட்டரி சல்யூட்!

- ஆர்.பி.ஆர்.

• ஹாங்கிங் கிளைடர்

• கிளைடர் உட்புறம் எந்திரத்தின் தோற்றம்



சிறகடிக்கும் ஆசை சின்ன ஆசையல்ல; பெ
திரியும் ஆசை. விமானம் வந்த பிறகு கூட மனி

ஏனெனில் -

விமானத்தின் உள்ளே ஹாய்யாக உட்கார்
புத்தகம் படித்துக் கொண்டு, அல்லது தூங்கிக் கெ
சமாசாரமும் இல்லை.

பறப்பது எனில் - ஒரு பறவைக்குரிய சுதந்

மேலே வானம்.... சுற்றிலும் அகண்ட
மரங்கள், மலைகள், பள்ளத்தாக்குகள், தொட்டு
காற்று... இவற்றினூடே பறவைகளோடு சே
பறப்பதிலுள்ள சுவாரஸ்யமே தனி...

இந்த எண்ணம் உந்தித் தள்ள, ஜெர்மனிய
முதன் முதலாக ராட்சச இறக்கைகள் போல வடி
வெறும் அலுமினியக் குழாய்களும் உறுதியா
இறக்கை. அதனுடன் தன்னை இணைத்துக் கெ

# ...ரச் சின்ன ஆசை ...டிக்க ஆசை!



குறித்து, அப்படியே 'பறக்க' ஆரம்பித்தார். இது நடந்தது பத்தொன்பதாம் நூற்றாண்டில்...

அன்றைக்கு ஆரம்பித்தது இந்த கிளைடரில் பறக்கும் தீரசாகஸம். அன்றிலிருந்து இந்தியா உட்பட உலகின் பல தேசங்களிலும் ஐந்து லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் கிளைடரில் பறப்பதை ஒரு 'ஹாபி'யாகக் கொண்டிருக்கிறார்கள்.



## கிளைடரில் பறப்பது எப்படி?

பொதுவாகவே விமான பைலட்டுகளாக இருப்பவர்களுக்கு இது ஒரு சுவாரஸ்யமான ஹாபி என்றாலும் மற்றவர்களும் முறையான பயிற்சிக்குப் பின் கிளைடரில் ஹாய்யாகப் பறக்க முடியும். கிளைடரில் உங்களை இணைத்துக் கொண்டு, உயரமான குன்றின் உச்சிக்குச் சென்று, அதன் விளிம்பிற்கு ஓடி, கொஞ்சம் எம்பித் தாவி, கால்களை உயர்த்தி, பறக்கும் நிலைக்கு உங்கள் உடம்பைத் தந்து விட்டீர்களானால் போதும்... அவ்வளவுதான் பறக்க வேண்டியதுதான். பயிற்சி முடிந்து கீழே இறங்குவதற்கான மைதானம் எதிரே இருப்பது நல்லது.



✱ உட்கார்ந்தபடி பறக்கும் கிளைடர்

...சைதான். சிறகடித்துப் பறந்து வானில் விட்டபாடில்லை.

...ப்பிட்டுக் கொண்டு, அல்லது சரிந்து ... பயணிப்பதில் எந்தவிதமான 'திரில்'

...நாடு பறக்க வேண்டும்.
... கீழே கண்ணுக்குத் தெரியும் பூமி, ...லும் மேகம், அசுரத்தனமாய் மோதும் ...காணும் ஒரு மனிதப் பறவையாய்ப்



...சேர்ந்த ஓட்டோலிலியன்தல் என்பவர் ...கப்பட்ட கிளைடரை உருவாக்கினார். ...னியும் கொண்டு உருவாக்கப்பட்ட ...ரினோ ஹில்ஸில் ஏறி, அங்கிருந்து



''அண்டவெளியில் மிதப்பதும், உடலாலும் உள்ளத்தாலும் சுதந்திரமாய் உணர்வதும், எல்லாவற்றுக்கும் மேலாக, மேலே, கீழே, பக்கவாட்டில் என்று மூன்று விதமாகவும் உங்களால் நகர முடிவதும்... அடாடா... இந்த சுகம் வேறு எந்த விளையாட்டில் வரும்?'' - என்கிறார் 'கிளைடிங் சூப்பர் லீக்' நடத்தும் கிளப்பின் டைரக்டர் மேத்யூவிட்டல். காற்றின் விசையைப் பயன்படுத்தி, பல சந்தர்ப்பங்களில் எந்த உயரத்தில் தொடங்கினோமோ அதைவிட உயரத்துக்கு விண்ணென்று மேலே மேலே சென்று வானவெளியில் திளைப்பதற்கு ஈடுஇணை ஏது?

இந்தியாவில் அவ்வப்போது அங்கங்கே டெமான்ஸ்ட்ரேஷன்களும், கிளைடிங் போட்டிகளும் நடந்தாலும் ஹிமாசலப் பிரதேசத்தின் பில்லிங் என்ற இடத்தில் சர்வதேச அளவிலான லீக், சூப்பர் லீக் ரேஸ்களெல்லாம் நடத்துகிறார்கள். இந்தப் போட்டிகளில் உலகெங்கிலுமிருந்து வரும் 'மனிதப் பறவைகள்' கலந்து கொள்ளுகின்றன.

இறுதிப் போட்டி என்பது சில மணி நேரம் பறப்பதோ - ஒரு ரவுண்டில் யார் முதலில் வருகிறார்கள் என்பதோ அல்ல. மொத்தம் மூன்று நாட்கள் நடைபெறும் போட்டியில் பல்வேறு விதமான ரேஸ்களில் பங்குபெற வேண்டும். யார் அதிகம் பாயிண்டுகள் எடுக்கிறார்களோ அவர்தான் வெற்றி பெற்றவர்.

### 'சாம்ப்'களும் ரசிகர்களும்

மற்ற விளையாட்டுக்களைப் போலவே இந்த சாம்பியன்களுக்கும் ரசிகர்கள் உண்டு. பிரிட்டனின் மார்க் சிக்கிற்கு உலகெங்கும் ஏராள ரசிகர்கள். ஆசாமி தோற்றத்தில் சில்வஸ்டர் ஸ்டாலனைப் போல இருப்பார். அதனால் இவரை ரசிகர்கள் அழைப்பதே 'ராம்போ' என்றுதான்.

''கிளைடரில் பறப்பது கொஞ்சம் துணிச்சலும் ஆபத்தும் நிறைந்த விளையாட்டுத்தான். ஆண்களுக்குச் சரி. பெண்களுக்கு இந்த விளையாட்டில் என்ன வேலை?'' - இப்படி ஒரு கேள்வியை யாரோ ஒரு நிருபர் கேட்கப் போக, வீராங்கனை மேரி ஜோ ரூஃபத்திற்குக் கோபம் வந்துவிட்டது. ''ஏன் பெண்களுக்கு என்ன குறைச்சல்? எல்லா விளையாட்டுக்களுமே பெண்களுக்கும்தான். ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று ஒரு போடு போட்டார்.

சுவிட்ஜர்லாந்தைச் சேர்ந்த மோனிக், சின்ன வயதில் ஆல்ப்ஸ் மலைகளின் மீது விளையாடுவார். அப்போதே ஆல்ப்ஸ் மலைகளின் மீது பறக்க மனம் அடித்துக் கொள்ளுமாம். ஆனால் சின்னப் பெண் என்பதால் விட மாட்டார்களாம். என்றாவது ஒரு நாள் நிச்சயம் பறப்பேன் என்று உறுதி எடுத்துக் கொண்டார். விமான பைலட் ஆனார். இப்போது எங்கு கிளைடர் போட்டி நடந்தாலும் அங்கு அவர் ஆஜர்.

பெரும்பாலும் இளைய வயதினர் மட்டுமே இந்த சாகசங்களில் பங்குகொள்கிறார்கள் என்று நினைத்திருந்தால் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த ஆன்ட்ரே மிலெவ்ஸ்கியைச் சுட்டிக்காட்டுகிறார் மேரி ஜோ. ''ஆன்ட்ரேக்கு இப்போது அறுபது வயதாகிறது. என்ன ஜோராய்ப் பறக்கிறார் தெரியுமா? எனக்கும் அப்படி ஒரு ஆசை. என்னுடைய அறுபதாவது வயதிலும் நான் கிளைடரில் பறக்க வேண்டும்!''

கிளைடிங் சாதனைகளில் டிரியூ கூப்பரின் சாதனைதான் பெரிதாகப் பேசப்படுகிறது. பதினோராயிரம் அடி உயரத்திலிருந்து எம்பிப் பறந்திருக்கிறார் கூப்பர். (ஆஸ்திரேலியா) இன்னும் இவ்வளவு உயரத்திலிருந்து பறக்கும் துணிச்சல் யாருக்கும் வந்ததில்லையாம்.

### இந்தியாவிலும் ஆர்வம்

பெங்களூருக்கு அருகேயுள்ள ஜக்கூரில் அவ்வப்போது சிறிய அளவில் டெமான்ஸ்ட்ரேஷன்கள் நடத்தப்படுகின்றன.

உதகமண்டலத்தில் கிளைடிங் பயிற்சிப் பள்ளி ஒன்றையே வைத்து நடத்தி வருகிறார் ஜோயல் கோச்லின். பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த இவர், கிளைடர் பயிற்சி அளிப்ப



''எதுக்காக அந்த 'சாணை பிடிக்கிறவன்' உங்களைப் போட்டு இந்த அடி அடிச்சான்?''

'' 'கத்தியைத் தீட்டாதே, உந்தன் புத்தியைத் தீட்டு'ன்னு அவனுக்கு முன்னாடி பாடித் தொலைச்சுட்டேன்!''

- குடந்தை சுவீட்ரவி

துடன் கிளைடர்கள் செய்து விற்கும் தொழிற்சாலை ஒன்றையும் நடத்தி வருகிறார். ஜோயலின் தொழிற்சாலை மைசூரில் இருக்கிறது.

''இந்தியாவை எப்படித் தேர்ந்தெடுத்தீர்கள்?'' என்ற கேள்விக்கு இந்த பிரெஞ்சுக்காரர் சிரித்துக் கொண்டே அளிக்கும் பதில்: ''இந்தியாவை நான் தேர்ந்தெடுக்கவில்லை... இந்தியாதான் என்னைத் தேர்ந்தெடுத்தது.''

1971-ல் இந்தியாவைச் சுற்றிப் பார்க்க வந்தாராம். வந்தவருக்குப் பாண்டிச்சேரி மிகவும் பிடித்துப் போய் விட்டது. அங்கேயே எட்டு வருடங்கள் தங்கி விட்டார். ''ஐரோப்பாவில் இருந்திருந்தால் பலரில் ஒருவனாயிருந்திருப்பேன்... இங்கே இந்தியாவில் கிளைடிங் பயிற்சியையும், கிளைடர் தொழிற்சாலையையும் ஆரம்பித்தால் என்னவென்று தோன்றிற்று... இங்கேயே தங்கி விட்டேன்'' - என்கிறார்.

இவரது தொழிற்சாலையிலிருந்து ஒரு மாதத்திற்கு ஐந்து கிளைடர்கள் வரை விற்பனை ஆகின்றனவாம். ஒரு கிளைடரின் விலை இருபத்தைந்தாயிரத்திலிருந்து நாற்பதாயிரம் வரை ஆகிறது.

## பலரக கிளைடர்கள்

கிளைடர்கள் அடிப்படையில் இரு வகைப்பட்டவை. ஒன்று ஹேங்கிளைடர் (HANG GLIDER) இன்னொன்று பவர் கிளைடர் (POWER GLIDER). ஒவ்வொன்றிலும் பல ரகம் உண்டு.

ஹாங்க் கிளைடர்களில் உடம்போடு இணைத்துக் கொண்டு பறக்க வேண்டும்... இதற்கு மலையோ மேட்டுப்பாங்கான இடமோ அவசியம். பவர் கிளைடர்கள் எரிபொருள் மூலம் பறக்கும் சக்தி கொண்டதால் சீட்டில் உட்கார்ந்து கொண்டு இயக்கலாம்... கீழிருந்து கிளம்பி மேலே சென்று பறக்கும் வசதி உண்டு. இவை ULTRA LIGHT AIRCRAFT வகையைச் சேர்ந்தவை. இவற்றின் விலையும் அதிகம். கிளிப்பர் என்ற ULAவின் விலை 2,97,000. இன்னொன்று வாயேஜர். இதன் விலை மூன்று லட்சத்துச் சொச்சம். கிளைடர்களும் சரி, அல்ட்ரா லைட் ஏர்க்ராஃப்ட்களும் சரி அலுமினியக் குழாய்கள் மற்றும் Synthetic Sail Cloth எனப்படும் துணி (Dacron ரகம்) கொண்டு தான் தயாரிக்கப்படுகின்றன. டேக்ரான் ரகத் துணி இங்கிலாந்திலிருந்து தருவிக்கப்படுகிறது.

ஆரம்ப காலப் பயிற்சியாளர்களுக்கும் 'பறப்பதில்' அனுபவமே இல்லாதவர்களுக்கும் சிறந்தது, மஸ்கிட்டோதானாம். இலேசான, குறைந்த வேகம் கொண்ட, இயக்குவதற்கு மிகச் சுலபமான கிளைடர் இது. ஆரம்ப கால 'மனிதப் பறவைகள்' செய்யக் கூடிய முக்கால்வாசித் தவறுகளை 'மஸ்கிட்டோ' பொறுத்துக் கொள்ளுமாம்.

## வியாபாரம் எப்படி?

''கிளைடர் விற்பனையை வைத்துக் கொண்டு இங்கே யாரும் கோடீஸ்வரர் ஆகி விட முடியாது. ஏனெனில் வட்டம் மிகவும் சிறியது. இப்போது சில விளையாட்டுச் சங்கங்களும், ராணுவ அமைப்புகளும் மட்டும்தான் ஆர்டர் தருகிறார்கள். தனிப்பட்டவர்களின் ஆர்டர்கள் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டிருக்கிறது'' என்கிறார் ஜோயல்.

பவர் கிளைடர்கள் மூன்று சக்கரமெல்



''உங்க ஆபீஸ் ராமசாமி எப்படி சார்...?''

''பாட்டாளி சார், வாங்கற லஞ்சத்துக்கு சின்சியரா உழைக்கணும்னு நினைப்பார்...!''

– சீர்காழி வி. ரேவதி

லாம் வைத்து (Trike என்று பெயர்) கூடாரம் இல்லாத ஆட்டோ போல இருக்கிறது. ஓரளவு சொகுசாக உட்கார்ந்து கீழிருந்தே ஓட்டிக் கொண்டு சென்று மேலேறிப் பறக்கலாம்.

பறப்பதில் வல்லுநராகவும் சூரனாகவும் ஆகி விட்டால் ஜாவலின் XC க்குப் போய் விடலாம். ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்குப் போவதற்குக் கூட ஜாவலினைப் பயன்படுத்தலாம்.

ஹாங்க் கிளைடர்கள் மணிக்கு 25 கிலோ மீட்டர் தூரமும் பவர் கிளைடர்கள் மணிக்கு 100 கிலோ மீட்டர் தூரமும் பறக்கும் சக்திகொண்டவை.

சரி; இவற்றைப் பராமரிப்பது எப்படி? ''ஒரு காரைப் பராமரிக்கிறவர்களால் கிளைடரையும் பராமரிக்க முடியும்'' என்கிறார் ஜோயல்.

– அமுதவன்

# பனிப் பாறை

**7**

ஜகன்னாதன் அவசரமாக அறைக்குள் நுழைந்த வேகத்தைப் பார்த்து நித்யா திடுக்கிட்டாள்.

அவர் நுழைந்த தோரணை, அந்த முகத்தில் தெரிந்த பரபரப்பு, ஜீவனற்ற கண்கள் - எல்லாமே அவர் ஏதோ சொல்லக் கூடாத தகவலைச் சொல்ல வந்திருப்பது போல் தோன்றியது.

''உட்காருங்கோ சார். என்ன விஷயம்?''

ஒரிரு நிமிடங்கள் அவரால் ஒன்றும் பேச முடிய வில்லை. என்ன கூறுவது, எப்படிக் கூறுவது - என்று குழம்பிப் போனவ ராக அவளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

ஜகன்னாதன் போலார் கன்ஸ்டிரக் ஷன்ஸில் பணி புரியத் தொடங்கி இரண்டரை ஆண்டுகள் ஆகியிருந்தன. பி. டபிள்யூ.டி.யில் வேலை பார்த்து ஓய்வு பெற்றவர். ஐந்து பெண்களைப் பெற்று, அதில் இன்னமும் இரண்டு பேருக்குத் திருமணம் செய்ய வேண்டிய நிலையில் இருந்தார். ஒரு பையன் மெடிகல் காலேஜில் மூன்றாவது வருடம். குடும்ப நிலை சற்று பரிதாபகரமானதுதான். நுங்கம்பாக்கத்தில் தனி வீட்டில் இருந்த குடும்பம் ரிடையரான பிறகு திருவல்லிக்கேணிச் சந்தில் குடியேறியது. ஓய்வு பெற்ற பிறகு வேலைக்கு எங்கெல்லாமோ முயற்சி செய்தார். வேலை கிடைப்பது சிரமமாயிருந்தது.

இப்படி அலையும் வேளையில்தான் ஒரு நாள் பிற்பகல் பல்லாவரம் அருகே ஓர் இரும்புத் தொழிற்சாலைக்கான கட்டட வேலைகளை ஓர் இளம் பெண் தனியாக நின்று கொண்டு பராமரிப்பதை பிரமிப்புடன் பார்த்தார். வலியச் சென்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

'ஏம்மா... இந்த ஆர்.ஸீ.ஸீ. பீம்லை எல்லாம் இன்னும் மூணு இஞ்ச முன்னால தள்ளி நடுவில் பாலிஷுடு கிரானைட் ஃபினிஷிங் கொடுத்தாயானா முகப்பு பிரமாதமாக இருக்கும்!' என்றவரை நித்யா அதிசயமாகப் பார்த்தாள்.

வெள்ளை வெளேரென்று ஆறடி உயரம். நெற்றி நெடுகத் திருமண் காப்பு. பளிச்சென்ற முழுக்கைச் சட்டையும், பஞ்சகச்சம் வைத்த உடையும். அறிமுகம் ஆன பிறகு ஒரு பெரியவரின் கூட்டு இருந்தால் மனதுக்கு பலமாக இருக்கும் என்றெண்ணி ஜகன்னாதனை போலாரில் அமர்த்திக் கொண்டாள். முதலில் எண்ணூறு என்று தொடங்கி இன்று இரண்டாயிரத்து ஐநூறு வாங்குகிறார். கம்பெனிக்காக மாடாக உழைத்தார். மகன் இப்போது ஹவுஸ் சர்ஜன். நித்யாவைச் சொந்த மகள் போல் நேசித்தார்.

''என்ன விஷயம் மாமா?''

அவர் கலவரத்துடன் அவளைப் பார்த்தார்.

''கொழந்தே, புரூக் கம்பெனிக்காரா மிக்ஸரை அனுப்ப முடியாதுன்னுட்டாம்மா.''

''என்ன மாமா இது? அதுதான் அட்வான்கம் கொடுத்து, பத்து நாள் முன்னாலேயே புக் பண்ணிட்டோமே!''

''அதுதான் எனக்கும் புரியலை. மாடசாமி ஆளுகளைக் கூட்டிண்டு போனானா, அவா வந்து 'அனுப்பறதுக்கில்லை, நாங்க அம்மா கிட்டே ஃபோன்ல பேசிக்கிறோம்'னு சொல்லிட்டாளாம்.''

''மை காட்!! இனிமே எப்போ மிக்ஸர் வந்து, எப்போ வேலையை ஆரம்பிக்கறது! சரி மாமா. நான் மிஸ்டர் ஆரோக்கியத்து கிட்டே பேசிப் பார்க்கறேன்.''

ஜகன்னாதன் தயங்கியவாறே அவளைப் பார்த்துக் கூறினார் -

''அம்மா நித்யா - என்னவெல்லாமோ பேச்சு காதுல விழுந்தது.''

அவள் அவரை ஏறிட்டுப் பார்த்தாள்.

''அந்த விகவம் இன்டர்நேஷனல் காரன்தான் இப்படியெல்லாம் 'ஸ்கீம்' பண்ணறான்னு பேசிக்கிறாம்மா. ராமனை நேத்தைக்குப் பார்த்தேன். ஆள் அடியோட மாறிப் போயிட்டான். எதுக்கும் நீ கவலைப் படாதேம்மா. நல்லவாளுக்கு என்னைக்கும் பெருமாள் துணை நிச்சயம் உண்டு.''

அவள் ஒரு கணம் உறைந்து போனாள். பிறகு தொலைபேசியில் ஆரோக்கிய சாமியை அழைத்தாள்.

''ஹலோ! போலார் கன்ஸ்டிரக் ஷன்ஸ் நித்யா பேசறேன் சார்.''

''குட் மார்னிங் மிஸ் நித்யா...'' அவர் குரல் தயக்கத்துடன் ஒலித்தது.

''என்ன சார் இது? மூணு வருஷமா நான் கேக்கறப்போ எல்லாம் மிக்ஸரைத் தவறாம அனுப்பி வந்திருக்கீங்க. இன்னைக்குத் திடீர்னு என்னங்க ஆச்சு?''

மறு முனையில் மௌனம் ஒலித்தது.

ஆபஸ்தம்பன்

''என்ன சார் இது? பதில் சொல்ல லைன்னா என்ன அர்த்தம்? அட்வான்கம் குடுத்திருக்கோமே சார்.''

''அதில்லைம்மா. அட்வான்ஸை வேணு மானாத் திருப்பி அனுப்பிட றேன்.''

''அட! இப்போ பணத் தைப் பத்தி யார் சார் அவசரப் பட்டாங்க? நான் என்னோட வேலையை ஒரு குறிப்பிட்ட நாளுக்குள்ள முடிக்கக் கொடுக் கறேன்னு 'கமிட்' பண்ணி யிருக்கேன். இப்போ நீங்க பிக்சரை கடைசி நேரத்துல அனுப்பலைன்னா என் ப்ரஸ் டீஜ் என்ன ஆகும் சார்!''

மறு முனையில் பேச்சு



இல்லை.

''மிஸ்டர் ஆரோக்கியம். ஹையர் சார்ஜை டபுள் பண்ணிக்குங்க. நான் உடனே பணம் கொடுத்தனுப்பறேன். தயவு செய்து மிக்ஸரை ரிலீஸ் பண்ணுங்க.''

''ஓகே, மிஸ் நித்யா.''

நித்யா நிம்மதியாகச் சிரித்தாள்.

''மாடசாமியும் ஆளுங்களும் இங்கே தான் இருக்காங்க. உடனே அனுப்பி வைக்கிறேன் சார்.''

ஆயாசத்துடன் நாற்காலியில் சாய்ந்து கொண்டாள்.

''ஜகன்னாதன் மாமா... மிக்ஸர் அரை மணியில் வந்துடும். நீங்க மாடசாமி கிட்ட 'கேஷை' கொடுத்து அனுப்பிடுங்கோ.''

''சரிம்மா...'' அவர் திருப்தியுடன் நகர்ந்தார். கடவுளே! இன்னும் என்னவெல்லாம் சிக்கல்களைத் தாண்டியாக வேண்டுமோ! மீண்டும் ஆரோக்கியசாமியின் நம்பரைச் சுழற்றினாள். அவரேதான் ஃபோனை எடுத்தார்.

''அனுப்பிட்டேனே மிஸ் நித்யா.''

''நன்றி சார். உங்களை ஒரே ஒரு கேள்வி கேட்கணும். விகவம் இன்டர்நேஷனல்லே உங்களுக்கு எவ்வளவு தறதாச் சொன்னாங்க?''

அவர் பேசவில்லை.

''எல்லாத்துக்கும், எல்லோராலும் விலை பேச முடியும் சார். அது இன்னைக்கு எனக்குத் தெரிஞ்சு போச்சு. ஆனா... மூணு வருஷமாப் பழகின நீங்க எங்கிட்ட இப்படி நடந்துப்பீங்கன்னு நான் எதிர்பார்க்கலை! அதை நினைச்சாத்தான் வருத்தமா இருக்கு. குட்பை!'' என்று உடனடியாக போனை வைத்தவள், கைப்பையை எடுத்துக் கொண்டு நேராக அக்கவுண்டன்டிடம் சென்றாள்.

''மிஸ்டர் ரமேஷ் - நான் ஸைட்டுக்குப் போறேன். முக்கியமா ஏதாவது 'கால்' வந்துதானா இந்த நெம்பரில் காண்டாக்ட் பண்ணுங்க. அந்த மருந்துக் கம்பெனிக்கு 'டெண்டர்' அனுப்பியிருந்தோமில்லை? அவங்க கூப்பிட்டாலும் கூப்பிடுவாங்க.''

''யெஸ் மேடம்.''

ரமேஷ் அவள் போவதையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''மை காட்! வாட் எ மேக்னிஃபிஸன்ட் லேடி!'' என்று மனதுக்குள் பிரமித்தான்.

ஆட்டோவைப் பிடித்துக் கொண்டு வேலை நடக்கும் இடத்தை அவள் அடைந்த போது, மிக்ஸர் ஓடிக் கொண்டிருந்தது.

மாடசாமி ஓடி வந்தான் - ''சொல்லுங்கம்மா.''

''மூணு நாள் உபயோகத்துக்குன்னு கொடுத்திருக்காங்க மாடசாமி. இன்னைக்கும், நாளைக்குமா, ரெண்டு நாளிலயே வேலையை முடிச்சிடணும். அந்த ரூபா அதிகப்படியாக் கூலி குடுத்திடறேன். இன்னைக்கு நைட் பூரா வேலை நடக்கணும். டிபன், டீ - எல்லாத்துக்கும் அதோ - அந்த ஓட்டல்ல ஏற்பாடு பண்ணிடறேன். என்ன?''

''சரிங்கம்மா.''

''நாலைஞ்சு ஆளுகளை வேணுமானாப் புதுசாச் சேர்த்துக்க.''

மளமளவென்று வேலை நடந்து கொண்டிருந்தது. அவள் அங்கிருந்த ஒரு நாற்காலியில் சாய்ந்து அமர்ந்து கொண்டாள்.

மலைமலையாக மணலும், ஜல்லியும் குவிந்து கிடந்தன. சிமெண்ட் மூட்டைகள் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. குவிந்து கிடந்த மணல் மீது இரண்டு மூன்று குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. அருகே இருந்த தூங்கு மூஞ்சி மரத்தின் கிளையிலிருந்து தொங்கிய தூளியிலிருந்து இரண்டு சின்னப் பாதங்கள் வெளியே தெரிந்தன. எந்த சித்தாள் பெண்ணின் குழந்தையோ!

மிக்ஸர் இயந்திரம் மணலையும், ஜல்லியையும், சிமெண்டையும், தண்ணீரையும் பகாசுரன் போல் விழுங்கி விட்டு, கான்க்ரீட் கலவையாகக் கொட்டிக் கொண்டிருந்தது. கலவைகள் கூடை கூடையாகக் கைகள் மாறி, கண் இமைக்கும் நேரத்தில் மேலே போய்ச் சேர்ந்தன. வேலை மிகத் துரிதமாக நடந்து கொண்டிருந்தது.

திடீரென்று மனத்திலிருந்த களைப்பு நீங்கி, ஒரு நிதானம் ஏற்படுவது போல் உணர்ந்தாள். இது போல இரட்டிப்பு வாடகை கொடுத்து இயந்திரத்தை எடுப்பது அபத்தம் என்று நினைத்தாள். இன்று ஏற்பட்டது இக்கட்டான நிலை. தவிர்க்க முடியாத நிர்ப்பந்தம். இதை இப்படியே தொடர விடக் கூடாது. ஆரோக்கியசாமிக்கு விலை பேசிய விகவம், மற்ற கம்பெனிகளுக்கும் நாளை விலை பேச மாட்டான் என்று என்ன நிச்சயம்? இதிலிருந்து மீளுவதற்கு என்ன தான் வழி? நினைக்க நினைக்கத் தலையை வலித்தது. சற்று நேரத்தில் மனத்தில் ஒரு தீர்மானமான எண்ணம் எழுந்தது.

சொந்தமாக, கம்பெனிக்கென்று ஒரு மிக்ஸர் வாங்க வேண்டும். இருபத்தைந்து அல்லது முப்பத்தைந்தாயிரம் விலை இருக்கும். சாத்தியமா?

வங்கியிலிருந்து கடன் வாங்கினால் என்ன?

கடவுளே! இது ஏன் முதலிலேயே தோன்றவில்லை?

அன்று மாலையே தான் கணக்கு வைத்திருந்த வங்கியின் கிளை மேலாளருடன் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டாள்.

(தொடரும்)

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1993



முதல் பரிசு ரூ. 1,500

இரண்டாவது பரிசு ரூ. 1,000

மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ 1,000

ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு, ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 1 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

*“மந்திரி மஹோதாய்” என்ற தலைப்பிலான இந்தச் சிறுகதை, பிரதமர் பி.வி. நரசிம்மராவ் அவர்களால் 1962-ல் எழுதப்பட்டது. அன்றைக்கு என்ன நினைத்துக் கொண்டு எழுதினாரோ, அது இன்றைக்கும் நூறு சதம் பொருத்தமாகத்தான் இருக்கிறது!*



# “மாண்புமிகு அமைச்சர்”

“என்னத்தைச் சொல்றது ஸார்? கலிகாலம் பாருங்க! மாண்புமிகு அமைச்சர் அவர்கள் சட்ட திட்டத்தைப் பற்றிப் பேசுகிறார். சாத்தான் வேதம் ஓதுது! நீங்களே சொல்லுங்க! நான் இந்த ‘மாண்புமிகு’க்கு என்ன என்ன செய்யலை? இவரைத் தேர்ந்தெடுக்க ராத்திரி பகல்னு பார்க்காமே வீடு வீடாப் போய், எத்தனை வோட்டுக்கள் சேகரிக்கக் கொடுத்திருக்கேன். ஐம்பது ஜோடி காளைகளோடு ஊர்வலம் நடத்தியிருக்கேன். குதிரைச் சின்னத்தின் வேட்பாளர் பத்தாயிரம் ரூபாய் முழுசா ‘அட்வான்ஸா’க் கொடுத்தார். அதை வேண்டாம்னு உதறித் தள்ளினேன். மாசற்ற ‘ஜான் பாய்’ சைக்கிள் சின்னக்காரரை இவருக்காகத் தோற்கடித்து உற்றார் உறவினர்கிட்ட மூக்கறுத்துக்கிட்டேன், அதுவும் இவரை ஜெயிக்க வைக்க... இப்போ என்னடான்னா! நம்ம மந்திரி ஐயா சௌகரியமாகப் பதவிக்கு வந்ததும் சட்டம் ஒழுங்குமுறைன்னு ‘கிளிப்பிள்ளை’ போல திருப்பி திருப்பிச் சொல்கிறார். இதுதான் ஐயா கலியுகம்னு சொல்றது. நன்றி கெட்ட ஆள், நாணயமில்லாத ஆள்... நான் என்ன லேசுப்பட்டவனா? இந்த அமைச்சரவை எத்தனை நாள் நிற்கும்னு பார்த்துப்பிடறேன்! மறுபடியும் தேர்தல் களத்திலே ஐயா குதிக்கட்டும்! இவருக்குக் கறுப்புக் கொடி காட்டி, அழுகின முட்டைகள் வீசச் செய்யலேன்னா என் பேரை... மாற்றிக் கூப்பிடுங்க!”

கொட்டுகிற மழை போல அவர் பேசிக் கொண்டிருந்தார். பளபளக்கும் பட்டுச் சட்டை. 303 துப்பாக்கி போல கூர்முனையுடைய காந்திக்குல்லா. விலையுயர்ந்த மூக்குக் கண்ணாடி, மணிக்கட்டில் ரோலக்ஸ் கடிகாரம், நல்ல கட்டுமஸ்தான உடல், கையில் ஆங்கிலப் பத்திரிகை. அவர் தேசபக்தியின் அவதார புருஷராகக் காட்சியளித்தார். பாரத மாதாவுக்காக எத்தனை மகத்தான தொண்டு செய்துள்ளார்! தாழ்வாரத்தில் அவர் உரத்த குரலில் கர்ஜித்துக் கொண்டிருந்தார்.

அவர் முன் சென்றதுமே நான் பயந்து நடுங்கினேன். எனக்கு அவர் தெரிந்தவர். நான் அவரைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் அறிந்தவன். அவர் மிகவும் பிரபலமானவர். ஒவ்வொரு தேர்தலுக்குப் பின்னரும் அவரது முன்னேற்றம் அபாரமாக இருந்தது. அதைப் பார்த்தால் பாரதத்தின் ஒவ்வோர் நயாபைசாவும் அமெரிக்க டாலராக மாறி விட்டதோ என ஐயம் ஏற்பட்டது.



அவர் 'ஸெல்ப்மேட்' மனிதர். முழுக்க முழுக்க தம்மைத்தாமே மேம்படுத்திக் கொண்டவர். வோட்டுக்கள் சேகரித்துக் கொண்டு வருவதை விட ஹரிஜனங்கள், மலைஜனங்கள் முதலிய நம்பத்தகாத இனத்தவரை வாக்களிக்காது தடுக்கும் கலையில் வல்லவர். சில நேரங்களில் குழைந்தும், இழைந்தும், சில நேரங்களில் எரிந்து விழுந்தும் தம் தொண்டர்கள் - அவர் பகைவர்கள் நோக்கில் குண்டர்கள் - மூலம் அனைத்தையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்.

அவரது மேற்படி சொற்பொழிவு மாண்புமிகு அமைச்சரின் அலுவலகம் அருகே நடந்து கொண்டிருந்தது. திரைமறைவில் அமர்ந்திருந்த அமைச்சர் நுகர்வதற்காகவே இரைந்து கொண்டிருந்தார்.

நான் தலைவரை வணங்கினேன். பின்னர் அவர் சொற்பொழிவின் தொடரில் நுழைந்து விட்டுக் கேட்டேன். "ஏங்க? அமைச்சர் என்ன செய்ய முடியும்? விதிமுறைக்கு அடங்காதவற்றை அவர் எவ்வாறு செய்வார்? பாவம்!"

அவ்வளவுதான் சொன்னேன்! என்ன நடந்தது தெரியுமா? அவருடைய கோப எரிமலை வெடித்து, என் மீது அதன் குழம்பைக் கக்கிற்று. கொதித்து எழுந்து, என் மீது இரைந்தார்.

"ஏன் ஐயா! யாருக்குச் சட்டம் ஒழுங்கு முறை, விதி எல்லாம் சொல்லித் தர்றீங்க! எனக்கு மட்டும் தெரியாதுன்னு நினைச்சீங்களா? நான் கூட ஒழுங்கு முறை சட்ட திட்டங்களை வாய்பாடு மாதிரி சொல்ல முடியும்! முறைப்படி காரியம் நடக்க வேண்டும் என்றால், நான் ஏன் இந்த மந்திரி முந்திரிகிட்டே வர்றேன். அங்கங்கே இருக்கிற இன்ஸ்பெக்டர் சட்டப்படி செய்ய முடியாதா? சாதாரண குமாஸ்தா செய்ய முடியாதா? ஒன்றியத் தலைவர் செய்ய முடியாதா? என் மனைவி கூட ஒரு செயலர்தான். ஐயா சற்று கவனமாகக் கேட்டுக்கங்க; ஏதாவதொரு வேலை, சட்டத் திட்டத்திற்கு உட்படாம இருக்கிறப்போதானே மந்திரி கிட்ட வர்றோம். சட்டம், திட்டம் விதிமுறையைப் பற்றிப் பேசணும்னா இந்த மந்திரி என்ன பிசாத்து!... என்ன பண்றது! இப்போ வருத்தப்பட்டு என்ன பயன்? தலைவிதி, ஊழ்வினை! செய்ய முடியாத தியாகம் செஞ்சு, ஏகப்பட்டதை இழந்து, இந்த ஆளை 'சப்போர்ட்' பண்ணினேன். கனவிலே கூட இந்த ஆளு சட்டம் சட்டம்னு சொல்ற 'கிளிப்பிள்ளை'யாவான்னு நினைக்கலே! இப்போத்தானே தெரியறது, இந்த ஆளுடைய உண்மையான சொரூபம்! பெரிய தவறு செஞ்சிட்டேன் - காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போடணும்."

ஒரு வழியாகப் 'பெருந்தலைவரிடம்' விடுபட்டு, அமைச்சர் பெருமானின் அலுவலகத்தை அடைந்தேன். அவர் வீட்டின் வெளிப்புறம் பதினைந்து பதினாறு

பி. வி. நரசிம்மராவ்

வேலையற்ற வெறும் சோம்பேறிகள், உடைந்த பெஞ்சுகளின் அழுக்கான 'சாலையில்' தேநீர் அருந்திக் கொண்டிருந்தனர். 'கிரீஸ்' போட்ட மின்சார விசிறிகள் போடும் சப்தம் போல, ஏதேதோ கெக்கெக்கத்துக் கொண்டிருந்தனர். சுவர்களில் வெற்றிலைபாக்கு போட்டு உமிழ்ந்த செங்காவிக்கறை படிந்திருந்தது. அது அதியதார்த்த வாதம் போன்று காட்சியளித்தது. சொந்த வீட்டில் இருப்பது போன்ற ஒரு நெருங்கிய உணர்வு ஏற்பட்டது.

நான் அமைச்சர் பெருமானிடம் அவருடைய பால்யகால சக மாணவன் என்று சொல்லியனுப்பினேன். அந்தச் செய்தி கிடைத்ததும் நான் உள்ளே அழைக்கப்பட்டேன். அமைச்சரின் அறையை அடைந்ததும் என் நெஞ்சு திடுக் திடுக் என்று அடித்துக் கொண்டது. என்ன காரணம்? ஏனோ தெரியவில்லை!



தலைவர் : என்னைப் பற்றித் தொகுதி மக்கள் என்ன பேசிக்கிறாங்க?

உதவியாளர் : சின்ன வீடு வச்சிருக்கீங்களே, அதுதான் நல்லா இல்லைன்னு பேசிக்கிறாங்க!

தலைவர் : என்ன! கிளி மாதிரி இருக்கா...! அவளையா நல்லா இல்லைன்னு சொல்றாங்க?

- சீர்காழி வி. ரேவதி

அவரைப் பார்த்ததும் நான் சீக்கிரம் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அவர் முகம் வாட்டமாக இருந்தது. உடல் சற்று பருத்திருந்தது. ஆனால் அதைப் பார்த்தால் ஆரோக்கியமாக இருப்பதாகத் தெரியவில்லை. ஏதோ பிணியுற்றவர் போலத் தெரிந்தார். அந்த ஆழமான, கவலை மிக்க பொறுப்பாளரின் முகத்தில் சிரித்த முகத்துடன் இருந்த கவலையற்ற பழைய நண்பனைப் பார்க்க முயன்றேன். ஆனால் வெற்றி கிட்டவில்லை!... எனக்கு வருத்தமாக இருந்தது.

ஒருபுறம் ஒரு நல்ல மனிதர் தர்க்கம் செய்து கொண்டிருந்தார். ''கேளுங்க ஐயா! அந்தக் காவல் துறை அதிகாரியை உடனே மாத்தலைன்னா நம்ம கூட்டாளிங்க வாழ முடியாது. மெய்யாலுமே சொல்றேன், நம்மளை அந்த ஆள் கூண்டோடு கைலாசம் அனுப்பி விடுவான்!''

அமைச்சர் சர்மாஜி, ''அந்த ஆள் இங்கே வந்து ஒரு மாதம் கூட ஆகலை. அவரை எப்படி 'டிரான்ஸ்ஃபர்' பண்றது?'' என்றார்.

''அதனாலேதான் உங்ககிட்டே சொல்றேன். அந்த காவாலிப் பயலை மாற்றிவிங்கன்னா அவன் இடத்திலே வரவன் நம்ம ஆட்கள்கிட்ட மரியாதையா, ஒழுங்கு முறையா அடங்கி நடப்பான்.''

மந்திரி சற்று கடுமையான முகத்தோடு கூறலானார்.

''அவனை நான் எப்படி டிரான்ஸ்ஃபர் செய்ய முடியும்? அது கலெக்டர் செய்ய வேண்டிய வேலையாச்சே!''

''அது தெரிஞ்சுதானே இங்கே வந்தேன். கலெக்டருக்கு போன் செஞ்சு நீங்க சொல்லுங்க. அந்த ஆள் செய்து விடுவான்.''

மந்திரி சற்று தயங்கலானார். அவர் குரல் தணிந்து, சற்று நடுங்கியது.

மற்றொரு கௌரவமான மனிதர் அங்கிருந்தார். அவர் மாப்பிள்ளை காந்திஜி பயணம் செய்வாரே அந்த வகுப்பில் பி.ஏ. பாஸ் செய்திருந்தார். அவர் மந்திரியின் சிபாரிசில் காந்தி வழி வந்த அந்த மாப்பிள்ளையை கெஜட் அதிகாரியாக அமர்த்த வந்திருந்தார்.

ஆனால் மந்திரி சற்று தம்மை மறந்த நிலையில் வினவினார்.

''நீங்க என்ன சொல்றீங்க ராவ்ஜி? அந்த பதவிக்கு முதல் வகுப்பில் தேர்ந்தவர்களே போட்டா போட்டி போடுறாங்க! உங்க மாப்பிள்ளையை எப்படி நியமிக்க முடியும்?''

ராவ்ஜி சிடுசிடுத்தார்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. எப்படி வாங்கித் தருவீங்களோ? என்ன செய்வீங்களோ! அதைப் பற்றி எனக்கு அக்கறை யில்லை. அந்த 'போஸ்ட்' என் மாப்பிள்ளைக்குத்தான் கிடைக்கணும்!''

மூன்றாவதாக ஒரு நபர் கட்டளை விட்டுக் கொண்டிருந்தார். நாற்பதே மதிப்பெண் பெற்று பி.யூ.சி. பாஸ் செய்த தமது திருமகனுக்குப் பொறியியல் கல்லூரியில் அமைச்சர் இடம் வாங்கிக் கொடுக்க வேண்டும்.

மந்திரி, ''தொண்ணூறு விழுக்காடு பெற்றவர்களுக்கே இடம் கொடுக்காத நேரத்தில், எப்படி கொடுக்கிறது?'' என வினவினார்.

''அவர் அதற்கு, ''என் பிள்ளை 90 சதவீதம் வாங்கியிருந்தா உங்களுக்கு ஏன் ஐயா தொந்தரவு தரேன்!'' என்றார்.

நான்காவது பெரிய மனிதர் எதுவும் வேண்டி வரவில்லை. அவர் சொன்னார்.

''ரொம்ப பிரமாதம் உங்கள் பேச்சு. சத்தியமாச் சொல்றேன். ராம் நகரில் உங்க பேச்சு, அதுவும் சோஷலிஸத்தைப் புட்டுப் புட்டு வைச்சீங்களே... அதைப் பற்றித்தான் அத்தனை பேரும் உசத்தியாப் பேசறாங்க தெரியுமா?''

மந்திரி கூறினார் : ''ஐயா, கவுண்டரே! நான் ராம் நகரே போகலையய்யா. கடைசி நேரத்திலே என்னுடைய 'புரோகிராம்' கேன்ஸல் ஆயிடுச்சே! ஏதாவது பத்திரிகையிலே என் பேச்சு பிரசுரம் ஆயிருக்கா?''

கவுண்டரின் முகம் வெளிறியது. ஒரு வினாடிதான்! அடுத்த வினாடியே அவர் இரு மடங்கு உற்சாகத்துடன் பிதற்றலானார்.

இதற்குள் ஒரு விநோத மனிதர் அறைக்குள் நுழைந்தார். அவர் பேச ஆரம்பித்ததுதான் தெரியும். அவர் மொழியிலே முழுப்புள்ளி, கால்புள்ளி என்னும் நிறுத்தக் குறிகளே இல்லை. கையில் ஒரு மாபெரும் மாலை கொண்டு வந்தார். அதைப் பார்த்தால் அந்த ஊரிலே அடுத்த ஒரு வாரத்திற்கு உதிரிப்பூ கூட கிடைக்காது என்று தோன்றிற்று. அவர் படபடவென்று பொரிந்து கொட்டினார். அதன் கருத்து இவ்வளவு தான்.

அவர் 'இன்ட்ரஸ்ட்' சம்பந்தப்பட்ட ஒரு பைல் - ஒரு கோப்பு - அன்று மாலை 4:30க்கு அமைச்சரின் மேஜைக்கு வரப் போகிறது. பியூன் முதல் ஸெக்ரடரி வரை, அத்தனை பேரும் அவர் பக்கம் இருக்கிறார்கள். ஆகையால் அமைச்சர் பைல் படிக்க வேண்டிய கஷ்டம் கூட படாமல் அதில் கையெழுத்துப் போட்டால் போதும். அவர் வாழ்க்கை வெற்றி பெறும்!

அவருக்குப் பிறகு இன்னும் எத்தனையோ மக்கள் வந்தனர். ஒருவர் திறப்பு விழாவில் பங்கேற்க வேண்டினார். மற்றவர் நாடாவை வெட்டி வெற்றிலை பாக்குக் கடையின் மாபெரும் விற்பனையைத் துவங்க வேண்டினார். 'நமது எதிராளிகள் தங்கள் விரோதிக் கும்பலைச் சேர்ந்த அமைச்சரை மாநாட்டிற்கு 'புக்' செய்து விட்டார்கள். எனவே நீங்கள் எங்கள் மாநாட்டிற்கு அவசியம் வருகை தர வேண்டும்' என ஒருவர் மன்றாடினார். 'அமைச்சருக்குப் பதில் இன்னொரு அமைச்சர்' என்பது அவர்களின் சீரிய கொள்கை!

மாலை ஐந்து மணி அடித்தது. அமைச்சர் பெருமானுக்கு ஏதோ ஒரு கொண்டாட்டத்தில் தலைமை ஏற்க வேண்டியிருந்தது. என்னையும் அங்கே அழைத்துச் சென்றார். மூன்று, நான்கு மணி நேரம் சொற்பொழிவாற்றிக் கொண்டே இருந்தார். அதுவும் பற்பல மனிதர்களிடையே, பற்பல மொழிகளில். பற்பல முறையில் பேசிக் கொண்டே இருந்தார். கடைசியில் அவர் என்ன சொன்னார்? ஏன் சொன்னார்? என்று ஒருவராலும் கூற முடியவில்லை. ஆனால் அதிகாரிகள் அனைவரும் அமைச்சர் பெரு



'' 'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவி பாடும்...' ராமு! இதைப் போல ஒரு வரியைச் சொல்லு!''

'' 'இளையராஜா வீட்டு இட்லி குக்கரும் இசைபாடும்' சார்!''

- ச. வரதராஜன்

மானை மிகப் பயனுள்ள, பலன் தந்த சொற்பொழிவாற்றியதற்காக வானளாவப் புகழ்ந்து வாழ்த்தினார்கள்.

இரவு பதினோரு மணிக்கு அமைச்சர் ரொம்பவும் களைத்துப் போய் வீடு திரும்பினார். அவரிடமிருந்து விடை பெறு கையில் நான், ''இந்த மாதிரி உங்க ஓய்ச்சல் ஒழிவுக்கு எல்லையே கிடையாது போல் இருக்கிறதே! இவற்றினிடையே தேசத்தின் முக்கிய பிரச்னைகள் பற்றி எண்ண, உங்களுக்கு நேரம் எங்கே கிடைக்கிறது?'' என வினவினேன்.

அமைச்சர் பெருமான் சற்று புன்சிரிப்புடன் கூறினார். ''அவற்றைப் பற்றி யார் நினைப்பது? நான் நினைக்கிறேன் என்று நீ ஏன் எண்ணுகிறாய்?''

தமிழாக்கம் :

பி.கே. பாலசுப்பிரமணியன்

*(நன்றி : 'பாரத்கே பிரதான் மந்திரி ஸ்ரீ பி.வி. நரசிம்மராவ்' - ஆந்திர பிரதேஷ் ஹிந்தி அகாதமி வெளியீடு)*



## 18. ஏமாற்றத்தில் ஓர் இன்பச் சுமை!

மாலை மயங்கி, இருள் தன் மெல்லிய கருப்புப் போர்வையை வானத்தில் விரிக்கத் தொடங்கியிருந்தது. அதில் ஆங்காங்கே வைரப் பொட்டுக்களைப் போல் இரண்டொரு விண்மீன்களும் மின்னத் தொடங்கியிருந்தன. ஆனால், அரண்மனையின் வாயிலில் வரிசையாக எரியத் தொடங்கி விட்டிருந்த பந்தங்கள், முகப்பைப் பகலாக மாற்றிக் கொண்டிருந்தன. வரிசையாக வந்து நின்ற புரவிகளில் புழுதியும் சேறும் படிந்து, அவை நீண்ட தூரப் பயணத்துக்குப் பிறகே மதுரையை அடைந்திருக்கின்றன என்பதை உணர்த்தின. அவற்றின் மீது அமர்ந்திருந்த வீரர்களும் ஆடைகள் சில கிழிந்தும் ஒரிரு ரத்தக் கறைகளுடனும் தென்பட்டனர்.

அதை மேன்மாடத்திலிருந்தே கவனித்த மூவரும் அவர்கள் ஏதோ போரிலும் ஈடுபட்டு விட்டுத் திரும்பியிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டனர்.

விக்கிரமனும் அம்மங்கையும் கார்குழலியும் மேன்மாடத்திலிருந்து இறங்கி வருவதற்குள் சமுத்திரபந்தன் புரவியை விட்டிறங்கி, அரண்மனைக்குள் நுழைந்து விட்டிருந்தான். முன் கூடத்தில் நின்று கொண்டிருந்த கவிநாராயணபட்டரின் கால்களில் எண்சாண்கிடையாக விழுந்து வணங்கி எழுந்த சமுத்திரபந்தனை அவர் அன்போடு விசாரிப்பதையும் அவன் வினயத்துடன் ஏதோ பதிலளித்துக் கொண்டிருப்பதையும் கண்ட அம்மங்கை, 'யாரிவன்? 'சமுத்திரபந்தன்' என்ற பெயரும் இதுவரை கேள்விப்படாததாக இருக்கிறதே' என்று சிந்தித்தாள்.

விக்கிரமனோ சமுத்திரபந்தனை நெருங்கி அவனை அணைத்துக் கொண்டான். அவனிடம் மகிழ்ச்சியும் சிரிப்பும் பொங்கி வழிந்தன.

அந்த மனிதன் உயரத்திலும் ஆகிருதியிலும் ஏறக்குறைய சோழ இளவலை ஒத்திருந்ததைக் கண்ட கார்குழலியின் கண்களில் சந்தேகச் சாயை ஒன்று படர்ந்தது. ஆனால் சற்றே நரையோடிய அவன் தாடியும் மீசையும் அவளுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தின.

இரு இளவரசிகளையும் நெருங்கிய சமுத்திரபந்தன், தலை தாழ்த்தி இருவரையும் வணங்கினான். அவன் வணங்கிய முறை கார்குழலியின் அறிவுக்குப் பளிச்



# பாண்டியன் மகள்

**விஷ்வக்சேனன்**

சென்று உண்மையை உணர்த்தியது. அவள் விழிகள் வியப்பில் விரிந்தன. அதைக் கவனித்த படியே வந்த விக்கிரமன், ''ரகசியத்தை வெளியிடாதே'' என்று பார்வையாலேயே அவளை எச்சரித்தான்!

''அண்ணா யாரிவர்? உன்னுடன் இத்தனை நெருக்கமாகப் பழகும் இவரை இதுவரை நான் கண்டதில்லையே?'' என்று வினவினாள் அம்மங்கை.

விக்கிரமன் பதில் கூறுமுன் இடைமறித்த சமுத்திரபந்தன், ''இல்லை, இளவரசி! என்னை இதற்கு முன்பே கண்டிருக்கிறீர்கள்'' என்றான் கட்டையான குரலில்.

''இல்லவே இல்லை'' என்று மறுத்தாள் அம்மங்கை.

''ஒருவேளை நீங்கள் என்னை மறந்திருக்கலாம்'' என்றபடி தன் தாடியைத் தடவி விட்டுக் கொண்ட சமுத்திரபந்தனையும் மற்ற இருவரையும் பார்த்த அம்மங்கை, விக்கிரமன் முகத்தில் தெரிந்த விஷமத்தையும், கார்குழலியின் முகத்தில் தெரிந்த மகிழ்ச்சியையும் கண்டு, குழப்பத்துடன் கோபமும் கொண்டவளாக, அவர்களை எரித்து விடுவது போலப் பார்த்து விட்டுத் திரும்பி, அரண்மனையின் உட்புறத்தை நோக்கி நடந்தாள். விக்கிரமன் கடகடவென்று நகைத்த ஒலி அவளைத் தொடர்ந்தது.

மூன்று தினங்களாகத் தாங்கள் காத்துக் கிடந்த நபர் அதிமுக்கியமான செய்தியுடன் வருவதாக விக்கிரமன் கூறியது அவள் நினைவில் வந்தது. தன் கோபத்தை அடக்கிக் கொண்டவள் மீண்டும் அறையிலிருந்து திரும்பி, வெளியே வந்து, விக்கிரமனது அறையை நோக்கி மெல்ல நடந்தாள்.

அறையின் நடுவே அந்த சமுத்திரபந்தன் பிரதானமாக அமர்ந்திருக்க, நேர் எதிரே கவியும், அருகில் விக்கிரமனும் அமர்ந்திருந்தனர். உறையூரிலிருந்து வந்திருந்த அமைச்சர் பல்லவராயரும் அங்கிருந்தார். சற்றுத் தள்ளி நின்றிருந்த கார்குழலி, அவர்கள் பேசுவதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள்.

சமுத்திரபந்தன் கோட்டாற்றுக்கரையின் நிலைமை பற்றி கூறிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அம் மங்கை அறையின் வெளியே தயங்கி நிற்க, பல்லவராயர் கேட்டதும் சமுத்திரபந்தனின் பதிலும் அவள் காதில் தெளிவாகவே விழுந்தன.

''கோட்டாற்றில் நிலைமை அத்தனை மோசமாகவா இருக்கிறது?''

''ஆம் அமைச்சரே! காடுகளில் மறைந்திருக்கும் பாண்டியர் படை, சேரலாதன் படையும் ஈழத்துப் படையும் வந்து இணையக் காத்திருக்கிறது.''

கவியிடமிருந்தும் கேள்வியொன்று பிறந்தது : ''காத்திருக்கிறது என்றால்... ஏன் இன்னும் இணையவில்லை?''

''பாண்டியரது படையில் குறைந்தது பதினாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள்.

சேரனது நாலாயிரம் பேர் கொண்ட படை இன்னும் விழிஞத்திலேயே இருக்கிறது. அது மலைக் கணவாயில் வந்து தங்கும். போர் தொடங்கினால் உடனே வந்து கலந்து கொள்ளும்.''

''ஈழத்து வீரர்கள் எத்தனை பேர்?''

''தண்டநாயகன் வீரபாகு, ஈழத்திலிருந்து இரு கலங்களை மட்டுமே வரச் சொல்லி ஓலையனுப்பியிருக்கிறார்.''

''ஏன்?'' பல்லவராயரின் குரலில் வியப்பு ஒலித்தது.

''உதவிப் படையைக் குறைத்துக் கொள்ளும்படி நான்தான் யோசனை கூறினேன்!''

''உன் யோசனையை அவன் எப்படி ஏற்றான்?''

''தகுந்த காரணங்களோடு தரப்படும் யோசனையை ஏற்பதில் என்ன தயக்கமிருக்க முடியும்?''

''என்ன காரணம்?''

''முதல் காரணம், ஈழத்து இளவரசிக்கு மாறவர்மனைக் கண்டாலே பிடிக்கவில்லை. இரண்டாவதாக, மாறவர்மன் வெற்றி பெற்றாலும் பாண்டியன் மகள் இருப்பதை மக்கள் அறிந்தால் அவன் அரியணை ஏறுவதை மக்கள் விரும்ப மாட்டார்கள் என்று கூறினேன்.''

''பிறகு?''

''மாறவர்மனுக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்குமாறு ஈழத்துத் தண்டநாயகனைச் சேரர் படைத் தலைவன் கேட்டுக் கொண்டான். அதனால் கார்குழலியைக் கண்டு பிடித்து அழிக்க மார்க்கியனை வரவழைத்தான் தண்டநாயகன். அதைத்தான் முன்னதாக உங்களுக்குத் தெரியப்படுத்தினேன்.''

கவி குறுக்கிட்டார் : ''சரி இவன் ஓய்வெடுக்கட்டும். நாளைக் காலை நம் விவாதத்தைத் தொடரலாம்'' என்றவர் எழுந்தார். மற்றவர்களும் எழுந்தனர்.

**வா**யிலருகில் நின்றிருந்த அம்மங்கையைக் கண்ட விக்கிரமன், அவள் கைகளைப் பற்றி அழைத்து வந்தான். கவியைத் தொடர்ந்து அமைச்சரும் வெளியேறிய பின்னர், சமுத்திரபந்தனைப் பார்த்து, ''நீயே சொல்லு, சமுத்திரபந்தா!'' என்றான்.

சமுத்திரபந்தன் முகத்தில் விஷமம் படர்ந்தது.

''இளவரசே, மாறவர்மனை மணக்க வந்திருக்கும் ஈழத்து இளவரசியைக் கண்டேன்'' என்றான்.

''மணம்தான் தடைப்பட்டு விட்டது என்றாயே?''

''ஆம். நாக கன்னிகை போலிருக்கிறாள். அத்தனை அழகான பெண்ணை மணக்க அவனுக்கு அதிர்ஷ்டமில்லை. அவனை அவளுக்கு அடியோடு பிடிக்கவில்லையாம்!''

''பின் யாரைப் பிடிக்கிறதாம்?''

''மேலைமங்கலத்தை பாண்டியரிடமிருந்து ஒரே நாளில் மீட்டானாமே ஒரு சோழ வீரன். அரையன் மதுராந்தகனாமே. அவன் புகழ் சேர நாட்டிலும் பரவியிருக்கிறது. அவனைப் போன்ற ஒரு வீரன்தான் அவளுக்கு வேண்டுமாம்!''

அம்மங்கையின் முகத்தில் ஆவல் பிறந்தது.

''அந்த மனிதர் எங்கே? பொதிகையிலிருந்து கார்குழலியை அனுப்பியவர் பிறகு எங்கே போனார்?'' என்று கேட்டாள்.

சமுத்திரபந்தனின் முதிர்ந்த முகத்தில் சிந்தனை படர்ந்தது. ''அவனை விழிஞத்தில் கண்டதாக நம் வீரர்கள் கூறினார்கள். பிறகு....'' என்று இழுத்தான் சமுத்திரபந்தன்.

''பிறகு?'' அம்மங்கையின் ஆவல் அதிகரித்தது.

''பிறகு அந்த ஈழத்து இளவரசியுடன் அவர்கள் கலத்தில் அவன் காலத்தை ஓட்டிக் கொண்டிருப்பதாகவும் அறிந்தேன்'' என்றான் சமுத்திரபந்தன்.

அம்மங்கையின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. ''நீங்கள் உண்மையைத் திரித்துக் கூறுகிறீர்கள். அவர் அப்படிப்பட்டவரில்லை'' என்று சீறியவள், வெடுக்கென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு வெளியேறி நடந்தாள்.

**இ**ரவு இரண்டாவது ஜாமம் முடிவுறும் தறுவாயில், தன் அருகில் நிச்சலனமாக உறங்கிக் கொண்டிருந்த கார்குழலியைக் கண்ட அம்மங்கைக்குப் பொறாமை

## அருள்வாக்கு

**ம**த ஸ்தாபகர்களின் கருத்துக்கு நிரம்ப முக்கியத்துவம் உண்டு என்பது வாஸ்தவம். ஆனாலும் ஒரு மதத்தை ஸ்தாபிப்பது என்று வருகிற போது, பிற மதங்களுடைய கொள்கைகளைக் கண்டனம் செய்து, தங்கள் சித்தாந்தங்களையே உறுதிப்படுத்த வேண்டும் என்று ஏற்பட்டு விடுகிறது. தையல்காரர் மாதிரி, தங்கள் கொள்கையை மட்டும் இறுக்கிப் பிடித்து வைத்துக் கொண்டு, மற்றதை எல்லாம் வெட்டி, தங்கள் கருத்தில் கொஞ்சம் பலவீனமானதற்குக் கூட ஒட்டுக் கொடுத்துத் தைத்துக் கொண்டு போக வேண்டியிருக்கிறது. வெறுமே இலக்கிய சிருஷ்டியில் ஈடுபட்டிருப்பவனுக்கு இந்தப் பட்சபாதமான வேலை கிடையாது. மனத்தில் தோன்றியது, கண்ணில் பட்டது, அழகான காட்சி, அழகிய பண்பு இவற்றை விருப்பு வெறுப்பில்லாமல் அவன் சொல்லிக் கொண்டே போவான். 'தனது' என்று எதையும் பிடித்துக் கொள்ளாமல் விஷயத்தை உள்ளபடி பார்த்து

(objective - ஆக), பேதமில்லாமல் நடுநிலைக் கருத்து கொண்டு (impartial ஆக) சர்வ சுதந்திரமாக திறந்த மனசோடு, உள்ளதை உள்ள படி சொல்வான். உலகம் முழுவதையும் இப்படியே படம்பிடித்துக் காட்டி விடுவான். அதை உலகம் எடுத்துக் கொண்டாலும் சரி, தள்ளி விட்டாலும் சரி, பயனை எதிர்பார்க்காதவன் அவன். இவன் அழுக்கே இல்லாமல் சுத்தமானவனாக இருந்தால் இவன் மனத்தில் தோன்றுவதே உத்தமமான பண்பு. அதை யாருக்கும் பயப்படாமல் சொல்லி விடுவான். தன் மனத்தில் உத்தமமாகத் தோன்றாததை இன்னொருத்தருக்குப் பயப்பட்டோ பவ்யப் பட்டோ ஒரு கவி சொல்ல மாட்டான்.

ஒரு விஷயம் ஒரு நாட்டின் பண்புக்கு உகந்ததுதானா என்று அறிய வேண்டுமானால் அதற்குப் பிரமாண வாக்கு (authority) அந்தத் தேசத்தின் இப்படிப்பட்ட மகாகவியின் வாக்குதான்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



யாயிருந்தது. 'என்ன நிம்மதியான உறக்கம்? எனக்கு மட்டும் ஏன் தூக்கம் வரவில்லை?' என்று எண்ணியவளின் மனம் சமுத்திர பந்தன் கூறிய வார்த்தைகளிலேயே புரண்டு கொண்டிருந்தது.

'சமுத்திரபந்தன் கூறியது உண்மையாக இருக்குமோ?' என்ற சந்தேகம் அவளை வாட்டியது. 'சே! அப்படி இராது. அவர் ஈழத்துக் கலத்தில் சில காலம் தங்கியிருந்தாலும் அது ஏதோ முக்கியமான அரசாங்கக் காரியத்தையொட்டித்தான் இருக்கும்' என்று தனக்குத்தானே சமாதானமும் கூறிக் கொண்டாள்.

அப்போது அரண்மனையின் கூடத்தில் ஏதோ அரவம் கேட்டது. சட்டென்று எழுந்தவள், மெல்லக் கதவைத் திறந்து வெளியே நோக்கினாள்.

பந்தங்களும் வேல்களும் தாங்கிய வீரர்கள் முன்செல்ல, அவர்களைத் தொடர்ந்து கூடத்தின் உள்ளே வந்து கொண்டிருந்தான் விக்கிரமன். அவன் பின்னே ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தார் சோழர் படையின் மருத்துவர். அவர் கையில் மருத்துவப் பெட்டியும் இருந்தது.

இருவரும் சமுத்திரபந்தன் இருந்த அறையை நோக்கிச் செல்வதைக் கவனித்த அம்மங்கை திகைத்தாள். "நன்றாகத்தானே இருந்தார் அந்த மனிதர்? என்ன நேர்ந்தது?" என்று நினைத்தவள், அந்த அறையை நோக்கி நடந்தாள்.

திரைச் சீலையை விலக்கி, மெல்ல அவள் உள்ளே பார்த்த போது, சமுத்திர பந்தன் மறுபுறம் திரும்பி அமர்ந்திருக்க, மருத்துவர் மெல்லிய துணியினால் மூலிகைச் சாறு ஒன்றை அவன் முகத்தில் தடவிக் கொண்டிருந்தார். எதிரில் உற்றுப் பார்த்தபடி நின்றிருந்தான் விக்கிரமன்.

இன்னும் இரண்டொரு மூலிகைகளையும் தடவிய மருத்துவர் மறுபடியும் குனிந்து நிமிர்ந்த போது, அவர் கையில் சமுத்திர பந்தன் முகத்திலிருந்த தாடியும் மீசையுமிருந்தன.

அம்மங்கைக்கு மூச்சு நின்று விடும் போலிருந்தது.

நீண்ட துணியொன்றை நீரில் நனைத்து, அவன் முகத்தைத் துடைத்து விட்ட மருத்துவர், "சற்று நேரம் எரிச்சல் இருக்கும். உறங்கி எழுந்தால் சரியாகி விடும்" என்றார். அடுத்து மூலிகைகளையும் துணிகளையும் எடுத்துத் தமது பெட்டிக்குள் திணித்துக் கொண்டவர் விக்கிரமனிடம், "நான் விடை பெற்றுக் கொள்கிறேன்" என்றார்.

அவரை வழியனுப்பத் திரும்பிய சமுத்திரபந்தனைக் கண்ட அம்மங்கை திகைத்தாள். அரையன் மதுராந்தகன்! 'ஆ' என்ற வியப்பொலி கேட்டதும், முன்னே வந்து திரைச்சீலையை நன்றாக விலக்கிய விக்கிரமன், "வா தங்காய்! இவர்தான் சமுத்திர பந்தன்" என்றான்.

அரையன் தலையைத் தாழ்த்தி "வணக்கம் இளவரசி" என்று பழையபடி கட்டைக் குரலில் கூறவே, அம்மங்கை முகம் சிவக்கத் திரும்பித் தன் அறையை நோக்கி ஓடினாள்.

**கா**லைப் பொழுது மிக இனிமையாயிருந்தது அம்மங்கைக்கு. இரவு வெகு நேரம் சென்ற பின்பே உறங்கிய அவள், கதிரவன் உதித்துப் பல நாழிகை சென்ற பின்பே கண் விழித்தாள். நந்தவனத்திலிருந்து கிள்ளைகளும் குயில்களும் பாடிக்

கொண்டிருந்த நேரம் புதிதாக இருந்தது. சாளரத்தின் வழியே புகுந்த காலைத் தென்றலும் புதிதாகத் தோன்றியது அவளுக்கு.

முந்தின இரவின் சம்பவங்கள் உள்ளத்தில் அலைமோதத் தொடங்கியதால் எழுந்த மகிழ்ச்சி அவள் முகத்திலும் பரவியது. 'கார்குழலிக்குத் தெரிந்தது கூடத் தனக்குத் தெரியவில்லை; ஏமாந்து போனோம்' என்ற எண்ணம் வெட்கத்தை அளித்தாலும் அப்படி ஏமாந்ததே ஓர் இன்பச் சுமையாகவும் தோன்றியது. முதலில் ஏமாந்ததாலும் சமுத்திரபந்தன் கூறிய கதையால் வேதனையுற்றதாலும்தானே பின்னால் உண்மை தெரிய வந்த போது மகிழ்ச்சி மும்மடங்காகியது!

இனிய நினைவுகளில் புரண்டவளுக்கு, அரண்மனையின் நிசப்தம் வியப்பளித்தது. யோசிக்கவும், 'அன்று மந்திராலோசனை நடக்கிறது' என்பது திடும்மென்று நினைவுக்கு வர, துரிதமாக எழுந்து நீராடி மாற்றுடை தரித்துச் சித்தமானாள். மந்திராலோசனை மண்டபத்தின் பலத்த காவலைக்



"டிரெயினுக்கும் பெண்ணுக்கும் என்ன வித்தியாசம்...?"

"டிரெயின் 'லேட்' ஆனா 'மேக்-அப்' பண்ணி வந்துடுது...! பெண் 'மேக்-அப்' பண்ணிக்கிறதுனாலே தான் லேட்டா வர்றா!"

– டைம்ஸ் ஆஃப் இந்தியா
தகவல் : ராஜி ராதா

கடந்து அவள் முன்னேறிய போது, ஏற்கெனவே சிம்மாசனத்தில் விக்கிரமன் வீற்றிருக்க, அவனுக்கு எதிரே ஒரு பக்கமாகக் கவியும், பல்லவராயரும் அடுத்து அரையன் மதுராந்தகனும் அமர்ந்திருந்தனர். விக்கிரமனுக்கு நேர் எதிரே சோழ மண்டலத்தின் பல கோட்டைத் தலைவர்களும், காவற்படைத் தலைவர்களும் அமர்ந்திருந்தனர். அனைவரது முகங்களிலும் இறுக்கம் படிந்திருந்தது. இரண்டொருவர் மட்டுமே திரும்பி அம்மங்கை வருவதைப் பார்த்தனர்.

சந்தடியின்றி ஓரமாக நடந்து கார்குழலியின் அருகில் சென்று அமர்ந்த அம்மங்கை, கவி ஏதோ கூறிக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கேட்க ஆரம்பித்தாள்.

"உள்ளநிலை உங்களுக்குப் புரிகிறது என்று எண்ணுகிறேன். கோட்டாற்றில் கிட்டத்தட்ட பதினாயிரம் பேர் கொண்ட படை காத்திருக்கிறது. கொங்குப் பாண்டியன் ஜெகவீரனையும் களத்திலிறக்க முயன்று கொண்டிருக்கிறான், மார்த்தாண்டன். அந்த முயற்சி வெற்றி பெற்றதும் போர் முரசை ஒலிப்பான்."

கோட்டைத் தலைவன் தனஞ்செயன் எழுந்தான்.

"சேரனும் ஈழத்துப் படையும் மாறவர்மனுக்கு உதவுவதாகக் கூறப்பட்டதே" என்றான்.

பதில் அரையனிடமிருந்து வந்தது.

"விழிஞத்தில் கடற்படைத் தளமொன்றை நிறுவியிருக்கிறான் சேரன். ஈழத் தண்டநாயகனும் சேரன் தலைநகரில்தானிருக்கிறான். ஆனால் அவர்களது உதவியைத் தாமதப்படுத்தத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டு விட்டன."

"நமது காவற்படைகளும், கோட்டை வீரர்களும் சேர்ந்தால் கூட ஆறாயிரம் வீரர்களுக்கு மேல் இராதே" என்ற தனஞ்செயனின் குரலில் கவலை பெரிதும் ஒலித்தது.

அவன் கூறியது உண்மையென்பது அனைவருக்கும் புரிந்தது. அவையில் அமைதி நிலவியது.

கவியின் குரல் மீண்டும் கணீரென்று ஒலித்தது :

"பொதிகையின் அடிவாரத்திலுள்ள படை தவிர, காவற்படைகள் அனைத்தையும் தயாராக வைத்திருங்கள். உத்தரவு கிடைத்ததும் அவை கோட்டாற்றை நோக்கிக் கிளம்ப வேண்டும். வடக்கே சாளுக்கியருடன் நமது போர் முடியும் தறுவாயில் இருக்கிறது. எனவே அஞ்ச வேண்டாம். அரையன் மதுராந்தகன் சென்று மன்னரைக் கண்டு உத்தரவு பெற்றுத் திரும்புவான்."

கோட்டைத் தலைவர்களின் மேலும் பல சந்தேகங்களுக்கு விக்கிரமனும் பல்லவராயரும் விளக்கங்கள் கூறி முடிக்க உச்சிப் பொழுது ஆகி விட்டது.

அவை கலைந்த பின் அரையனைத் தனிப்பட அழைத்து ஏதோ கூறிய கவி நாராயணபட்டர் இறுதியில், "நீ இன்றே கிளம்பி விடு மதுராந்தகா!" என்று உத்தரவிட்டார். ஜெயந்தனையும் உடன் செல்லுமாறு பணித்தார்.

மெல்ல விக்கிரமனை நெருங்கிய அம்மங்கை, "அண்ணா, அவர் வந்து ஒரு நாள் கூட ஆகவில்லையே, அதற்குள் எங்கே கிளம்புகிறார்?" என்றாள். அவள் குரல் தழுதழுத்தது.

அவன் தலையை வருடிக் கொடுத்த விக்கிரமன், "கவலைப்பட வேண்டாம் தங்காய். அவன் மன்னனிடம் செல்கிறான். விரைவில் திரும்பி விடுவான்" என்றான்.

(தொடரும்)

# பத்மநாபமங்கலத்தில் ஒரு பழமுதிர் சோலை!

'சொந்த ஊரில் இருந்த கடைசி இரண்டு ஏக்கர் நிலத்தையும் குத்தகைக்காரனிடமே கிடைச்ச தொகைக்கு வித்துட்டேன். இப்ப இருக்கிற சட்ட திட்டங்கள்ல யாரால போராட முடியுது...' பட்டணவாசிகளிடம் இந்தப் பல்லவியை அதிகமாகக் கேட்டுப் பழகிவிட்டோம். இவர்களுக்குள் ஒரு சின்ன ஏக்கம் இருக்கத்தான் செய்யும். சொந்தமான நிலம் தங்களுக்கு இனி இல்லை என்ற வருத்தம்... இந்த ஏக்கம் கலபமாகத் தீர ஒரு வழி பிறந்திருக்கிறது...



- தவணை முறையில் பணம் செலுத்தி கால்/அரை அல்லது ஒரு ஏக்கர் நிலம் வாங்கலாம்.
- சாகுபடி பற்றிய கவலையில்லை
- விளைச்சலை விற்கும் பொறுப்பு இல்லை.

இந்தப் பொறுப்புகளையெல்லாம் மற்றொருவர் பார்த்துக் கொள்ள, நிலம் வாங்கிய மூன்றாவது ஆண்டிலிருந்து கணிசமான லாபப் பங்கீடு கிடைக்க வாய்ப்பு இருக்கிறது - விவசாயம் மூலம் கிடைக்கும் வருமானத்துக்கு வரி செலுத்தத் தேவையில்லை என்பது கூடுதல் லாபம். எக்காரணம் கொண்டாவது நிலத்தை விற்க விரும்பினால், இந்தப் புதுமையான திட்டத்தை வகுத்துச் செயல்படுத்தும் மாக்ஸ்வொர்த் நிறுவனமே அதைத் திரும்ப வாங்கிக் கொள்ளும்.

ஒரு ஏக்கருக்கு 120 முதல் 140 டன் தக்காளி; 40 முதல் 60 டன் குடமிளகாய்; எண்பது டன் வெள்ளரி; 25 டன் ஆரஞ்ச்; 8 டன் மாங்காய்! - இந்த ரீதியில் விளைச்சல் இருக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள். 'சாத்தியமா?' என்று நமக்குச் சந்தேகம் வருகிறது.

''பகல் கனவு அல்ல. இஸ்ரேலில் இதைச் சாதித்திருக்கிறார்கள். அதுவும் குறைவான, நிலத்தடி உப்புநீர் கொண்டு! புதிய புதிய உத்திகளைக் கையாண்டு அங்கே உள்ள விவசாயிகள் அடைந்து வரும் வெற்றிகள் அசாதாரணமானவை!'' என்கிறார் 'மேக்ஸ்வொர்த் ஆர்சார்ட்ஸ்' நிறுவன அதிபர் ஆர். சுப்பிரமணியன்.

''இஸ்ரேலில் இது சாத்தியமாகலாம். இங்கே நடக்குமா?''

''நடத்திக் காட்டத்தான் போகிறோம். சிதம்பரனார் மாவட்டம், ஸ்ரீவைகுண்டம் தாலுகாவிலுள்ள பத்மநாபமங்கலம் கிராமத்தில் (திருநெல்வேலியிலிருந்து சுமார் 40 கி.மீ.) 360 ஏக்கர் வாங்கியிருக்கிறோம். 22 விவசாயக் கிணறுகள் வெட்டவிருக்கிறோம். சொட்டு நீர்ப்பாசன முறைதான் கையாளப் போகிறோம். நீர் வீணாகாது.

திரவ வடிவ ரசாயன உரங்களை, நிலத்தின் தேவைக்கேற்ப கம்ப்யூட்டர் கணித்துத் தரும். அதன்படி உரங்கள் பயன்படுத்தப்படும். மேலும்





"நம்ம கட்சித் தலைவர் போஸ்டர் ஒட்டிக் கொண்டிருந்து படிப்படியா அரசியல்லே முன்னேறியவர்தான்!"

"எப்படி கண்டுபிடிச்சீங்க?"

"மணமக்களை வாழ்த்தும் போது கூட போஸ்டரும் பசையும் போல ஒட்டி வாழணும்னு வாழ்த்தறாரே!"

- செந்தா



"அரசியல்வாதியோட பையன் போலிருக்கு...!"

"எப்படிச் சொல்றீங்க...?"

"டவுசர்ல - பெல்ட்டுக்குப் பதிலா சைக்கிள் செயினைக் கட்டியிருக் கானே...!"

- மதுரை ஜெயஸ்ரீராஜ்



"ஹோட்டலுக்குப் போனால் கூட ஒரு சின்ன ஸ்பூனாவது எடுத்தால்தான் மகிழ்ச்சியா இருக்கு... இது ஏன் டாக் டர்?"

"முதல்ல இங்கிருந்து எடுத்த தெர்மா மீட்டரைக் கொடுங்க; பிறகு உங்களுக்கு வைத்தியம் பார்க்கிறேன்!"

- சீர்காழி. வி. ரேவதி



இதாலிய அக்ரிகோடெக் நிறுவன தொழில் நுட்ப உத்தியைக் கையாள ஒப்பந்தமும் செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் ஏக்கர் நிலத்திலும் 40 மாங்கன்றுகளும் இடை யிடையே மாதுளையும், கொய்யாவும் நட்டுப் பயிரிடப் போகின்றோம்!'' என் கிறார் அதிகாரிகளில் ஒருவரான அமிதாப கோஷ்.

இவர்களுடைய புள்ளி விவரக் கணக்குப்படி, இந்தியாவில் சுமார் 250 மிலியன் ஏக்கர் சாகுபடி நிலங்கள் பயன் படுத்தப்படாமலே தரிசாகக் கிடக்கின்றன. இதில் விஞ்ஞான முறைப்படி பத்து சதவிகிதம் நிலத்தில் விவசாயம் செய்தால் கூடப் போதும். லட்சக்கணக்கான வேலை வாய்ப்புகள் உருவாகும். விவசாயத் துறைக்கு 70,000 கோடி ரூபாய்க்கு மேல் வருமானம் கிடைக்கும். பழ வகைகள் ஏற்றுமதி மூலம் 40,000 கோடி ரூபாய் கிடைக்கக் கூடும்!

**ப**ழப் பண்ணையை வெற்றிகர மாக உருவாக்கிய பிறகு, காய்கறிகள், பயிர்ச் சாகுபடி பணிகள் தொடங்கும் எண் ணம் மேக்ஸ்வொர்த்துக்கு இருக்கிறது.

''எங்களிடம் விவசாயத் துறையில் பட்டம் பெற்ற விஞ்ஞானிகள் இருக் கிறார்கள். இவர்கள் தைவானில் எட்டு வாரச் சிறப்புப் பயற்சி வேறு பெற் றிருக்கிறார்கள். தமிழ்நாடு வேளாண் பல் கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் ஜி. ரங்கசாமி, இந்தியாவின் விவசாய மேம்பாடு பற்றிய சாத்தியக் கூறுகளை அலசி ஆராய்ந்து தயாரித்த ஓர் அறிக்கையின் அடிப்படையில்தான் இந்த ஐடியாவே தோன்றியது!'' என்றார் அமிதாப கோஷ்.

''ஏன் பத்மநாபமங்கலத்தைத் தேர்ந் தெடுத்தீர்கள்? குறிப்பிட்ட காரணம் ஏதும் உண்டா?''

''அங்கேதான் நிலத்தின் விலை சற்றே சகாயமாக இருந்தது. பழப் பண்ணைக்கு ஏற்றதாகவும் இருந்தது. நிலத்தின் அமைப்பு, தண்ணீர் வசதி எல்லாவற்றையும் பரிசோதனை செய்த பிறகு அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தோம்!''

பகைமைப் புரட்சிக்கு வித்திட்ட வி. சுப்பிரமணியம் தமது ஆசி வந்த கரத்தால் இந்தத் திட்டத்தைத் தொடங்கி வைத்திருக் கிறார்; நம்பிக்கையும் தெரிவித்திருக்கி றார். இந்தப் பழமுதிர்சோலை, பணமும் உதிர்க்கத் தொடங்க வேண்டியதுதான் பாக்கி!

- சித்தார்த்

## துணிச்சலான தலையங்கம்!

◆ ''சரித்திரம் படைக்கும் சட்டமன்றம்!'' என்ற தலைப்பில் வெளிவந்த தலையங்கம் மிகவும் சிறப்பாக இருந்தது. குறிப்பாக, ''சட்டமன்றம் என்பது மக்கள் மன்றமாக, கருத்தரங்கம் பொறுப்புணர்வும் கோலோச்சும் இடமாக இருக்க வேண்டுமே தவிர, யதேச்சாதிகார மன்னர்களின் சபா மண்டபமாக மாறி விடக் கூடாது'' என்று துணிச்சலுடன் எழுதியிருந்ததை மிகவும் பாராட்டுகிறேன்.
கடலூர் - 1, கடல் நாகராசன்.

## சரியான சாட்டையடி!

◆ தலையங்கம், ஆளும் கட்சிக்குச் சரியான சாட்டையடி. லேசாக காங்கிரஸ் கட்சியினருக்கும் ஒரு குட்டு குட்டியிருக்கிறீர்கள். பாராட்டுக்கள்.
தூத்துக்குடி - 2,
எஸ். ராமசுப்பிரமணியன்.

## வழக்கத்துக்கு மாறாக...

◆ ''ஜெயஸ்ரீ : இசை உலகில் இன்னொரு நட்சத்திரம்'' படித்தேன். சினிமாப் பாடகர்கள், இசை அமைப்பாளர்கள் என்றால்தான் அட்டையில் பார்க்க முடியும்; செய்தி படிக்க முடியும் என்கிற வழக்கத்திற்கு மாறாக, வளரும் இசைக் கலைஞரை அட்டையில் போட்டு, அவருடைய திறமைகளுக்கு வாழ்த்துக் கூறியுள்ளீர்கள் பாராட்டுக்கள்.
கும்பகோணம் - 1,
டி. எஸ். சீதாராமன்.

## கலைச் சேவைக்குப் பாராட்டு!

◆ வளர்ந்து வரும் இளம் இசைக் கலைஞர் பாம்பாய் ஜெயஸ்ரீக்கு அட்டைப்படம் அந்தஸ்து அளித்து உற்சாகத்துடன் ஊக்குவிக்க முன்வந்த கல்கியின் கலைச் சேவைக்கு எனது உளங்கனிந்த பாராட்டுக்கள்.
சென்னை - 20, பி. கே. சங்கர்.

## ஏழைக்கேற்ற எள்ளுருண்டை!

◆ ''கொளுத்தும் கோடைக்கு கூலான குறிப்புகள்'' ஜில் என்று ஜஸ் வாட்டர் போல் இருந்தது. அதோடில்லாமல் ஏழைக்கேற்ற எள்ளுருண்டையாகவும் இருந்தது.
திருச்சி - 8, உ. ர. சங்கர்.

## முதல் மரியாதை!

◆ எளிமையும், நேர்மையும் நிறைந்த ராமசாமிப் படையாச்சியாரையும் இக்கால அரசியல்வாதிகளையும் ஒப்பிட்ட போது மனம் பெரிதும் ஆதங்கமடைந்தது. அவர் பெயரை ஒரு மாவட்டத்துக்குச்

## சரியான சாட்டையடி!

சூட்டும் அரசியல்வாதிகளும் சரி, அவர் இனத்தவர் அதிக அளவில் உள்ள கட்சியினரும் சரி அன்னாருடைய நல்லியல்புகளைக் கருத்தில் கொண்டு நடந்து கொள்வதே அவருக்குச் செய்யும் முதல் மரியாதையாகும் என்பதை உணர வேண்டும்!
அரசரடி, நெல்லை. வி. சிவா.

## கமல் கண்டித்திருக்கிறார்!

◆ கமல் ரசிகர்கள் அவர் கட்-அவுட்டுக்கு பால், பன்னீர் அபிஷேகங்கள் செய்வதை அவர் என்றைக்கோ கண்டித்தும், தடுத்தும் இருக்கிறார். ஆனால் இதையெல்லாம் எப்போதுமா கண்காணித்துக் கொண்டிருக்க முடியும்? சில கமல் (வெறியர்கள் என்று கூட சொல்லலாம்.) ரசிகர்கள் இது போன்ற செயல்களை நிறுத்து திற வழியைக் காணோம். என்ன செய்வது?
மொரட்டுப்பாளையம்,
இராஜேஸ்வரன்.

## சிறுகதையல்ல!

◆ ''வலி'' சிறுகதையைப் படித்த போது, அது சிறுகதை என்ற உணர்வே வரவில்லை. அத்தனை யதார்த்தம்.
கம்பம், ஏ. முருகன்.

## உன்னதச் சிறுகதை!

◆ சிறு துரும்பும் பல் குத்த உதவிடும் பொழுது, அற்ப ஜந்து என கருதிடும் கழுதையால் ''செல்வல்லி''க்கு அசாத்திய தைரியம் வருவது இயற்கையே... ''சுந்தரசோழன்'' ஓர் உன்னதப் படைப்பைத் தந்து விட்டார்!
சென்னை - 1, எஸ். பாலாஜி.

## வாய்ப்பு இல்லாதோருக்கு வரப்பிரசாதம்!

◆ கண் பாதுகாப்பு தொடர்பான கண்காட்சியை காண வாய்ப்புக் கிட்டாதவர்களுக்குக் 'கிராமவாசிகளே தொப்பி அணியுங்கள்...!' என்ற கட்டுரை ஒரு வரப்பிரசாதம்.
சென்னை - 23, கி. ராமதாஸ்.

## ஒரு திருத்தம்!

◆ ஆப்டோமெட்ரி கண் காட்சியைப் பற்றிய செய்தியை அளித்தமைக்கு மிக்க நன்றி. ஒரு திருத்தம். சூரிய ஒளிக் கதிரிலுள்ள ''அல்ட்ரா வைலட்'' கதிர்களினால்தான் நம் நாட்டு விவசாயிகள், கிராமவாசிகளிடம் அதிகமாகக் காடராக்ட் காணப்படுகிறது. இன்ஃப்ரா ரெட் கதிர்களால் அல்ல.
சென்னை - 16,
ச. வைத்திலிங்கம்.

# பெயர் வாங்கித் தந்த 'பட்டு மாமி' கை நழுவிப்போன 'காஞ்சி கோலம்'!



* எதிர் நீச்சல்



* கே. பாலசந்தர்



* வாலி



* நீர்க்குமிழி

மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் அரங்கம் நிரம்பி வழிந்தது. எனக்கோ உள்ளூர பயம்! ராகினி ரிக்ரியேஷன்ஸ் குழுவினர் 'சௌகார், யூ வில் மேக் இட்!' என்று தைரியமூட்டினார்கள்.

அவர்கள் சொன்னது போலவே நடந்தது. பல காட்சிகளில் கைத்தட்டல்; 'மிகையில்லாமல் இயல்பாய் நடிக்கிறார்' என்று பாராட்டு.

மேடை நடிப்பு பெற்றுத் தந்த உடனடி பாராட்டின் உற்சாகம் எனக்கு அப்போது புரிந்தது. ஊக்க டானிக்காக அது அமைந்தது. சினிமாவில் உடனடியாக டைரக்டரின் பாராட்டைப் பெறலாம். ஆனால் ரசிகர் பாராட்டுக்குக் காத்திருக்க வேண்டும்.

தொடர்ந்து நாடகங்களிலும் நடிப்பது எனத் தீர்மானித்தேன். இந்த முடிவை நான் எட்டுவதற்கு உதவிய ராகினி ரிக்ரியேஷன்ஸ் குழுவுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் தகும்.

நாடகங்களில் நடிக்க நான் ஊதியம் எதுவும் வாங்கிக் கொள்ளவில்லை. சினிமாவில் நான் பிஸியாய் இருந்த காலகட்டத்தில்தான் நாடக வாய்ப்பும் கிடைத்தது. இரண்டையும் அட்ஜஸ்ட் செய்வது சற்று கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனாலும் நான் நாடகங்களில் நடிப்பதை நிறுத்தி விட விரும்பவில்லை. நாடக மேடையும் ராகினி ரிக்ரியேஷன்ஸ் குழுவும் என்னை அந்த அளவுக்கு ஈர்த்திருந்தன - முக்கியமாகக் குழுவினரின் கட்டுப்பாடு, 'செய்வனத் திருந்தச் செய்' என்கிற என்னுடைய கொள்கைக்கு மிகவும் ஒத்துப் போனது. அதற்குக் காரணம், கே. பாலசந்தர்தான்.

மெழுகுவர்த்தியைத் தொடர்ந்து நாங்கள் அரங்கேற்றிய நாடகம் நீர்க்குமிழி. அதில் நான் ஏற்ற டாக்டர் பாத்திரத்தின் மூலமாக ஆழமான உணர்வுகளை அழுத்தமாக வெளிப்படுத்தும் சந்தர்ப்பம் கிடைத்தது. மற்ற நாடகங்களைப் போல் இதையும் தமிழகத்தின் பல ஊர்களில் மட்டுமின்றிப் பம்பாய் போன்ற பல வெளியூர்களிலும் அரங்கேற்றினோம். நீர்க்குமிழி சினிமாவாக எடுக்கப்பட்டபோது அதே டாக்டர் பாத்திரத்தில் நான் நடித்தேன். கூடுதலாக ஒரு பாடல் காட்சி இடம் பெற்றது தவிர, நாடக வடிவத்தைத் துளியும் மாற்றாமல்



எடுக்கப்பட்டது அப்படம். அதனால் நாடகத்தில் நான் எப்படி நடிக்கிறேன் என்பதைத் திரையில் பார்த்து உணர்ந்து கொள்ளும் சந்தர்ப்பம் கிடைத்தது! அப்போது இன்னொரு புதிய விஷயத்தையும் உணர்ந்தேன் : நீர்க்குமிழி மேடை நாடகமே ஒரு சினிமாவுக்கான இலட்சணங்களுடன் மிகச் சுவையாகப் படைக்கப்பட்டிருந்தது என்பதுதான்!

நாடகமாகவும் சினிமாவாகவும் பிரபலமடைந்த இன்னொரு படைப்பு 'எதிர்நீச்சல்'. அதில் நான் ஏற்ற பட்டு மாமி பாத்திரத்தை பாலசந்தர் உருவாக்கியிருந்த விதம் என்னை இன்னமும் ஆச்சரியமும் பெருமையும் கொள்ளச் செய்கின்றன. உவமைகளை உதிர்ப்பது அந்த பாத்திரத்தின் ஸ்பெஷாலிட்டி. அதிலும் பட்டு மாமி சினிமா பைத்தியம் என்பதால் உவமைகள் சினிமா சம்பந்தமாகவே இருக்கும்.... நகைச்சுவையான அந்தப் பாத்திரம் வித்தியாசமான ரோல்களைச் செய்ய வேண்டும் என்ற எனது விருப்பத்துக்கு நல்லதொரு வாய்ப்பாக அமைந்தது. பட்டு மாமி பாத்திரம் எவ்வளவு பிரபலமாயிற்று என்பது எல்லோரும் அறிந்ததே.

இங்கே பட்டு மாமி கேரக்டரில் நான் நடித்துக் கொண்டிருந்த போது ஒரு முறை லண்டன் போயிருந்தேன். அங்கே ஒரு பெரிய ஹோர்டிங். அதில் மடிசார் புடைவையில் என் லைஃப் சைஸ் உருவம். பக்கத்தில் "Pattumami comes to London" என்று வாசகம்! நான் லண்டன் சென்றதோ தனிப்பட்ட முறையில். எதிர்நீச்சல் நாடகம் போட ஒப்பந்தம் ஏதும் இல்லை. அப்புறம் எப்படி இப்படியொரு விளம்பரம் என்று எனக்கு ஒரே ஆச்சரியம்; ஒரே திரில். 'இந்தியா சாரி பாலஸ்' என்கிற கடையில், புதிய ஒன்பது கஜப் புடைவைக்கான விளம்பரம் என்று அப்புறம்தான் எனக்குத் தெரிந்தது.

நாடகம் மூலம் பெயரும் புகழும் பெருகி வந்தன என்றாலும் அதே சமயத்தில் தெலுங்கு, தமிழ், கன்னடம் என மூன்று மொழிகளிலும் எனக்குச் சினிமா வாய்ப்புகள் முன் எப்போதையும் விட அதிகமாகக் கிடைக்கத் தொடங்கின.

இது ஒருபுறம் எனில் ராகினி ரிக்ரியேஷன்ஸ் குழுவும் நாடகங்கள் போடுவதைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டு, ''கலாகேந்திரா'' என்ற பேனரில் ஏற்கெனவே மேடையேற்றிய நாடகங்களைத் திரைப்படங்களாகத் தயாரிக்கத் தொடங்கினார்கள். அந்த சினிமாக்களில் நடிக்கும் வாய்ப்பும் எனக்கு அளிக்கப்பட்டது.

இதன் பிறகு நாடக மேடைக்கும் எனக்கும் இடையிலான உறவுக்கு முற்றுப் புள்ளி விழுந்து விட்டது. நான் சற்றும் எதிர்பாராத விதமாக 1984இல் கவிஞர் வாலி தமது நாடகத்தில் என்னை நடிக்கும்படி கேட்டார். 'காந்தி கிராமம்' என்ற தலைப்பில் அவர் எழுதியிருந்த அந்த நாடகத்தை நான் படிக்க அனுப்பி வைத்தார். அது எனக்கு மிகவும் பிடித்துப் போய் விட, நடிப்பதாக வாலியிடம் ஒப்புக் கொண்டேன். அழுத்தமான கதை, ஆழமான சமுதாயப் பார்வை... அந்த நாடகத்தில் எனக்குக் 'கலெக்டர்' பாத்திரம்.

ஒத்திகைகள் ஆரம்பித்த சமயத்தில் எனக்கு ஒரு மேஜர் ஆபரேஷன் நடந்து முடிந்து ஓய்வில் இருந்தேன். எனவே உட்கார்ந்தபடியேதான் ஒத்திகைகளில் வசனம் பேசினேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக உடல்நிலை மேலும் ரொம்ப பலவீனமாகி விட்டதால் அந்த நாடகத்தில் நடிப்பதை நான் கைவிட வேண்டியதாயிற்று. இது குறித்து எனக்கு இன்னமும் தீராத வருத்தம்தான்.

எனக்கு மிகவும் பிடித்த இந்த நாடகம் திரைப்படமாக்கப்பட்ட போது பெரிய சர்ச்சைக்குள்ளாயிற்று. படத்தைத் தடைசெய்ய வேண்டும் என்கிற அளவுக்கு ஒரு தரப்பினர் கோபப்பட்டார்கள்.

தேசிய விருதுக்காகத் தேர்வு செய்யப்பட அப்படம் அனுப்பப்பட்ட போது, நடுவர்கள் குழுவில் நானும் இருந்தேன். அது எந்தப் படம், விருதுக்குத் தேர்வு பெற்றதா? அடுத்த வாரம் சொல்கிறேன்...

(தொடரும்)

**சௌகார் ஜானகி**

படங்கள் :
பிலிம் நியூஸ் ஆனந்தன்

# தடா கைதிகள் தப்பியது பற்றி..?

நீங்கள்

கேட்டவை

- தராசு

● எஸ். ஆர். மணிகண்டன், தஞ்சை.
*? மதம் மாறிய வன்னியகுல மக்களையும் பிற்படுத்தப்பட்ட வகுப்பில் சேர்த்து, முதல்வர் இருபது சதம் ஒதுக்கீடு அறிவித்திருப்பது பற்றி?*
*! பிற்படுத்தப்பட்ட வகுப்பில் சேராதவர்கள் இன்னும் யாராவது பாக்கியிருந்தால் அவர்கள் அடுத்த கிளர்ச்சி தொடங்கலாம்!*

● ஹஜ் பிரியன், ரெட்ஹில்ஸ்.
*? தமிழக முதல்வரால் வண்டலூர் மிருகக் காட்சி சாலைக்கு வழங்கப்பட்ட சிங்கக் குட்டி ஏற்கெனவே அங்கிருந்து கொண்டு வரப்பட்டுத்தான் ராணிப்பேட்டையில் ஜெக்குப் பரிசாக வழங்கப்பட்டதாமே?*
*! அம்மையாரைப் பெண் சிங்கம் என்று வர்ணித்துக் காக்காய் பிடிக்கச் சிலர் கையாண்ட தரித்தனம்.*

● கே. பட்டு, கும்பகோணம்.
*? "அ.இ.மு.க. எம்.எல்.ஏக்களை விலை பேசி, தமிழக ஆட்சியைப் பிடிக்க இ.காங்கிரஸ் முயற்சி செய்கிறது" என்று கவர்னரிடம் அ.இ.மு.க. புகார் கூறியுள்ளது பற்றி...?*
*! விலை போகக் கூடியவர்கள் பலர் அ.இ.மு.க. எம்.எல்.ஏக்களாக இருக்கிறார்கள் என்பதற்கு ஒப்புதல் வாக்குமூலம்.*

● வாசுதேவன், கல்கத்தா.
*? மாவடு பிடிக்குமா?*
*! என்ன கேட்டீர்! இதைவிட பூனைக்குப் பால் பிடிக்குமா என்றோ கண்ணனுக்கு வெண்ணெய் பிடிக்குமா என்றோ கேட்டிருக்கலாம்! மாவடு என்று சிலரக பிஞ்சு மாங்காய்களை வாங்கி ஏமாறக் கூடாது. வடு மரம் என்றே உண்டு. அவற்றிலிருந்து உதிர விடாமல் பறித்து திருச்சி மார்க்கெட்டுக்குக் கொண்டு வருவார்கள். சரியான சீசனில் இருபது ரூபாய்க்கு அள்ளிக் கொண்டு வந்து விட்டால், கோடை மூன்று மாதங்களுக்கும் பழைய சோறும் வடுமாங்காய் ஊறுகாயும் ஹய்யோ! ஹய்யோ!*

● ஏ. சுகுமார், காட்டுக்காணூர்.
*? பெண்கள் மேம்பாட்டு கழகத்திற்கு 'மகம்' என்று பெயர் சூட்டி ஜெயின் பிறந்த நட்சத்திரத்துக்கும் பெருமை சேர்க்கிறார்களே?*
*! உடன்கட்டை ஏறத் தயாராயிருந்தவரின் நட்சத்திரம் பெண்கள் மேம்பாடு கழகத்தின் பெயராவதா? இருக்காது... ஒருவேளை மகாமகத்தின் நினைவாகச் சூட்டியிருக்கலாம்!*

● தெ. சு. திலீபன், வத்ராயிருப்பு.
*? காங்கிரஸ் கட்சியிலிருந்து நால்வரை நரசிம்மராவ் பதவி நீக்கம் செய்துள்ளது பற்றி...?*
*! பின்னே, அவர்களைத் தூண்டி விட்ட அர்ஜுன்சிங் மீதா நடவடிக்கை எடுக்க முடியும்? அதான்! அதிலும் மேல் முறையீடு செய்து கொள்ளலாம் என்று சலுகை தர, ஒருவர் வருத்தம் தெரிவிக்க, மன்னிக்கப்பட்டு விட்டார். பாக்கி மூணு பேரும் வழிக்கு வந்து விடுவார்கள் சிறுகச் சிறுக.*

● கோ. வீரராகவன், அறந்தாங்கி.
*? இந்த சேஷன் சிறு பிள்ளையாக இருப்பாரோ?*
*! ஆமாம், ஒரு காலத்தில் சிறு பிள்ளையாக இருந்தவர்தான்!*

● சிவ. கலாதரன், சிதம்பரம்.
*? தமிழக சட்டசபை அமைச்சர்கள், எம்.எல். ஏக்கள் ஆகியோருக்குச் சம்பள உயர்வு தரப்பட்டுள்ளதே?*
*! அதுக்குப் போய் வயிறு எரியாதீங்க ஸார், "ரகளை அலவன்ஸ்"ன்னு வைச்சுக்குங்களேன்.*

● ஏ. முருகன், கம்பம்.
*? சுப்பிரமணிய சுவாமி அமைதியாய் இருக்கக் காரணம் ஏதுவோ?*
*! அமைதியா! அப்படி ஒரு வார்த்தை அவர் அகராதியிலேயே கிடையாது. குமரியிலிருந்து பாத யாத்திரை தொடங்கி இந்தக் கணத்தில் நெல்லை மாவட்டத்தில் தமிழகத்தில் ஜனாதிபதி ஆட்சிக்காக முழங்கிக் கொண்டிருக்கிறார்.*

● சிறுபிள்ளை...?



● பாதயாத்திரை



● ஆர். பாலு, திருச்சி.

? கமல் தயாரிப்பில் ரஜினி ஒரு படத்தில் நடிப்பது குறித்து?

! நடிப்பது இருக்கட்டும்; சம்பளம் எவ்வளவு? கூடவா? அதேவா? குறைச்சலா?

● சா. ரமேஷ்பாபு, லால்குடி.

? சமீப சம்பவங்களால் விமானத்தில் பயணம் செய்யவே பயமாயிருக்கிறதே?

! உங்க பாடு தேவலாம், சில பேருக்கு வீட்டு மேலே விமானம் பறந்தாலே பயமாயிருக்கு!

● பி. ராஜசேகரன், மதுரை.

? அண்மையில் படித்து ரசித்த புத்தகம்?

! ''இந்திரா காந்தியின் இரண்டாவது முகம்'' என்ற ஒரு சிறுகதைத் தொகுதி. மிக வித்தியாச களங்கள், நடை. இரவிச்சந்திரனை இதயத்தை விட்டு இறக்க முடியவில்லை.



* சபாஷ்!



* தில்லை திருப்பகம்

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? சமீபத்தில் தங்களை பாதித்த சம்பவம்?

! நடைபாதைச் சிறுவர்களைத் தெருக் குப்பை நீக்கி சுத்தப்படுத்தும் பணியில் சென்னை மாநகராட்சி ஈடுபடுத்தப் போவதாக வந்த ஒரு செய்தி. ரொம்பக் கேவலம். அவர்களில் பெரும்பாலோர் ஏற்கெனவே குப்பைக் காகிதம் பொறுக்கித்தான் ஜீவனம் நடத்துகிறார்கள். அவர்களை மேம்படுத்துவதற்குப் பதில் இப்படியா இழிவுபடுத்துவது? தமிழகத்துக்கே தலைகுனிவு.

● மாஜினி, சென்னை - 52.

? தமிழக ஆட்சியில் நீங்கள் காணும் குறைபாடு என்ன?

! நான் காண்பது கிடக்கட்டும்; இந்திய கணக்குத் தணிக்கைத் துறைத் தலைவர் தமிழக அரசு நிறுவனங்களின் செயற்பாடுகளை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பித்துள்ளார். 77 அரசு நிறுவனங்களில் 46 நிறுவனங்கள் மட்டுமே 91 - 92ம் ஆண்டு கணக்குகளை முடித்துள்ளன! இவற்றுள் 21 நிறுவனங்களின் மொத்த லாபம் ரூ 43.89 கோடி. 25 நிறுவனங்களின் மொத்த நஷ்டம் ரூ 46.94 கோடி. மொத்தமுள்ள 77 அரசு நிறுவனங்களில் செய்யப்பட்டுள்ள முதலீட்டுக்குக் கிடைத்துள்ள லாபம் 1.1 சதவீதம்!



* ''மாடல் சி.எம்.''



* ''சிறந்த சபாநாயகர்''

● த. ரவீந்திரன், புதுவண்டிப்பாளையம். ❑

? அ.தி.மு.க. சட்டசபை உறுப்பினர்களுக்கெல்லாம் முதல்வர் விருந்து வைத்திருக்கிறாரே, ஏதாவதும் விசேஷம் உண்டா?

! இல்லாமலா! மறுநாள்-வீட்டில் வைத்து எல்லோருக்கும் பெட்டி பெட்டியாகப் பரிசு அளித்திருக்கிறார். ''கணிசமான தொகை'' என்று ஒரு எம்.எல்.ஏ. சொன்னாராம்! பத்திரிகைச் செய்தி. மறுப்பதற்குத் துணிவு வீரப்பனிடம் மட்டும் இருந்திருக்கிறது. சபாஷ்!

● ஆர். பாலு, திருச்சி - 20.

? தடா கைதிகள் தப்பியது பற்றி தங்கள் கருத்து?

! கைதிகள் எப்போது, எங்கே, எந்த வழியாக அழைத்துச் செல்லப்படவிருக்கிறார்கள் என்பது புலிகளுக்கு உளவு தெரிந்திருக்கிறது. காவலுக்குச் சென்ற போலீஸார் போதிய அளவு முன்னெச்சரிக்கையுடன் இருந்ததாகவோ போராடியதாகவோ தெரியவில்லை என்பதுடன், அவர்களில் சிலர் குடித்தும் இருந்தார்கள்! இந்த விவரங்கள் வெளிப்பட்ட பிறகும் உயர் போலீஸ் அதிகாரி யாருமே பொறுப்பேற்று ராஜினாமா செய்ய முன்வரவில்லை! இதை விடக் கேவலம் நடந்து விட்ட அவலத்துக்குத் தமிழக அரசு வருத்தம் தெரிவிப்பதற்குப் பதில் அமைச்சர் அரங்கநாயகம், 'ஜெ மீது அவதூறு சுமத்த சி.பி.ஐ., புலிகளை விசாரித்துச் சதி பண்ணிக் கொண்டிருக்கிறது' என்று மக்களை திசை திருப்பிக் கொண்டிருப்பதுதான்.

● கோ. வீரராகவன், அறந்தாங்கி.

? ''சபாநாயகர்களிலேயே மிகச் சிறந்தவர் நமது சேடப்பட்டிதான்'' என்று ஜெ புகழ்ந்திருப்பதைப் பார்த்துக் கடகடவென்று சிரித்தேன். ஏன் ஐயா?

! சட்டசபைக் கூட்டத் தொடர் கடைசி நாளன்று முதல்வர் ஜெயலலிதாவை "Model chief minister" என்று சேடப்பட்டியார் புகழ்ந்திருக்கிறாரே, அதையும் படித்ததனால் இருக்கும்!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
த. ரவீந்திரன்,
20, எஸ். எஸ். கோயில் தெரு,
புதுவண்டிப்பாளையம்,
கடலூர் - 607 004.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 36. குகனுடைய சந்தேகம்

நிஷாத மன்னன் குகன் பார்த்தான். கங்கை எதிர்க் கரையில், என்றும் காணாத கோலாகலம். ஒரு பெரும் படை வந்து, நதிக்கரையில் தங்கியிருப்பதாகத் தெரிந்தது. பக்கத்தில் நின்ற தன் குலத்தார்களுக்கும் காட்டி, ''இது யார், என்ன காரணம் பற்றி இங்கே பெருஞ் சேனை வந்து கங்கையைத் தாண்டப் பார்க்கிறது? கொடியைப் பார்த்தால் அந்தக் கைகேயியின் மகன் பரதன் பெரும்படையைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறான் போல் தோன்றுகிறது. தேரின் மேல் காற்றில் திருவாத்தி மரக் கொடி ஆடுவது நன்றாகத் தெரிகிறது. அது அயோத்தி மன்னருடைய கொடி. இப்போது ராமனுடைய பகைவன் பரதனல்லவா அயோத்தி அரசன்? கைகேயி மகன் அக்கிரம வழியில் ராஜ்யத்தை அடைந்து விட்டு, இப்போது ராமனைக் கொல்லவும் வந்திருக்கிறான் போல் தோன்றுகிறது. நம்முடைய வீரர்களையும் இன்னும் கங்கைக் கரையில் நமக்குச் சேர்ந்தவர்களையும் உடனே திரட்டிக் கங்கைக் கரையை ஜாக்கிரதையாகக் காத்து நிற்க ஏற்பாடு செய்யுங்கள். ஓடங்களைக் கூட்டி அதில் ஆயுதங்களோடு வீரர்களை ஏற்றி யுத்தத்துக்கு ஆயத்தமாக இருக்க வேண்டும். பார்க்கலாம், இவர்கள் ராமனிடம் நல்ல எண்ணம் கொண்டவர்களாக இருந்தால், நதியைக் கடக்க உதவி செய்வோம். அல்லது கெட்ட எண்ணத்தோடு வந்திருப்பவர்களாகத் தெரிந்தால் இவர்களை இங்கேயே தடுத்து விட வேண்டும். கங்கையைக் கடக்க விடக்கூடாது'' என்றான்.

அவ்வாறே எல்லா ஆயத்தமும் செய்து விட்டு, மரியாதைக்கு வேண்டிய பரிசுகளை எடுத்துக் கொண்டு குகன் ஒரு படகிலேறி பரதனைச் சந்திக்கச் சென்றான்.

எதிர்க் கரையில் அதே சமயத்தில் சுமந்திரன், ''அதோ! நம்முடைய நண்பன் குகன், ராமனிடம் அளவிலாத அன்பு கொண்ட நிஷாத ராஜன், தன்னுடைய ஜனங்களோடு நம்மை மரியாதை செய்து வரவேற்க வருகிறான். இவன் இந்தப் பிராந்தியத்துக்குத் தலைவன். இவனுக்கும் இவனுடைய குலத்தார்களுக்கும் இந்த வனத்தின் மூலைமுடுக்கெல்லாம் நன்றாகத் தெரியும். ராமசந்திரன் தற்போது இருக்குமிடம் நமக்குச் சொல்லுவார்கள். அவ்விடத்துக்கு நம்மை க்ஷேமமாகவும் சீக்கிரமாகவும் கொண்டு போய்ச் சேர்ப்பார்கள்'' என்று பரதனுக்குச் சொல்லிக் கொண்டிருந்தான்.

இதற்குள் குகன் நதியைத் தாண்டி வந்து பரதனை நமஸ்கரித்தான்.

''சொல்லாமல் வந்து விட்டீர்கள். ஆயினும் என் பொருளெல்லாம் உமது என்று பாவித்து, என்ன வேண்டுமோ அதை உத்தரவிடுங்கள். உங்களையும் உங்கள் சேனையையும் உபசரிப்பது என் பாக்கியம்'' என்றான்.

''எண்ணிய எண்ணமே விருந்து'' என்று உபசாரம் சொல்லிவிட்டு, பரதன் மேலும் சொன்னான் : ''நான் இராமன் இருக்கும் இடம் போக வேண்டும். பரத்வாஜ ஆசிரமம் எங்கே இருக்கிறது? அதற்கு வழி எப்படி?''

இவ்வாறு கேட்டதற்குக் குகன் அஞ்சலி செய்து, ''ஸ்வாமி, நானும் என் ஆட்களும் தங்களுடன் கூடவே வந்து தங்களை ராமசந்திரனிருக்குமிடத்துக்கு அழைத்துப் போவதில் தடையொன்றுமில்லை. எந்த அபாயமும் கஷ்டமுமில்லாமல் கொண்டு போய்ச் சேர்த்து விடுவோம். ஆனால் மன்னிக்க வேண்டும், ஒரு சந்தேகம். என் மனத்தில் எழும் ஐயத்தைத் தீர்க்க வேண்டும், அரசகுமாரரே! இவ்வளவு பெரிய சேனையுடன் வந்திருக்கிறீர்கள். இது ஏன்

ராஜாஜி

என்று எனக்குக் கொஞ்சம் சந்தேகமாக இருக்கிறது?'' என்றான்.

இந்த மொழிகளைக் கேட்டதுமே பரதன், ''ஆஹா! இதைவிட என்ன அவமானம் எனக்கு வேண்டும்? ஜனங்கள் என்னைக் கண்டு, ராமன் விஷயமாகப் பயப்படும் காலம் வந்து விட்டதே! குகனே, நீ சந்தேகப்பட வேண்டாம். தகப்பனை இழந்த எனக்கு ராமனே தந்தையாவான். அவனை எப்படியாவது வேண்டிக் கொண்டு அயோத்திக்கு அழைத்துப் போக வந்திருக்கிறேன். தெய்வத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். என் உள்ளத்தில் வேறு எண்ணம் இல்லை'' என்றான்.

பரதனுடைய பெருந்துக்கமும் ராமனிடமுள்ள அவன் அன்பும் முகத்திலும் பேச்சிலும் குகன் கண்டு உள்ளம் பூரித்தான்.

''ஐயனே! உம்மைப் போன்ற மகான் வேறு யார் இருக்கிறார்கள் உலகத்தில்? தானாக வந்த பெரும் சம்பத்தை வேண்டாம் என்று துறக்க வல்லவர் தாங்களன்றி வேறு யாருளர்? தங்களுடைய புகழ் என்றென்றும் உலகத்தில் பரவி விளங்கும்'' என்றான் குகன்.

இரவாயிற்று. பரதனுடைய சேனைக்கு வேண்டியதெல்லாம் நிஷாத ராஜன் ஏற்பாடு செய்து முடித்தான். அனைவரும் படுத்தார்கள்.

குகனைச் சந்தித்த பிறகு பரதனுக்குத் துக்கம் முன்னிருந்ததை விட அதிகரித்தது. பரிசுத்த சுபாவத்தை ஜன்ம சம்பத்தாகப் பெற்றவன் பரதன். 'இப்படியாயிற்றே!' என்று அவன் ராமனை நினைந்து பெருமூச்சு விட்டு, உடம்பெல்லாம் வேர்த்துத் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். அவனுக்கு நேர்ந்த பெரும் பழியும், தந்தை இறந்த துக்கமும், ராமனைப் பிரிந்த துயரமும் எல்லாம் சேர்ந்து நெருப்பைப் போல் அவன் உயிரை எரித்தன. குகனும் அவனுக்கு ஆறுதல் மொழிகள் சொல்லி, கூடிய அளவு அவன் துயரத்தைத் தணித்து வந்தான். பரதனும் குகனும் கங்கைக் கரையில் சந்தித்து, துயரத்தைப் பங்கிட்டுக் கொண்டது ஆழ்வார்களும் பக்தர்களும் மிகவும் அனுபவிக்கும் கட்டம்.

ராமன் என்ன சாப்பிட்டான்? எங்கு உட்கார்ந்தான்? எங்கே படுத்தான்? என்ன சொன்னான்? என்ன செய்தான்? என்றெல்லாம் விசாரிக்க விசாரிக்க குகனும் அன்போடு எல்லாவற்றையும் சொல்லி, இடங்களைக் காட்டியும் வந்தான்.

முடிவில் லக்ஷ்மணன் எங்கே தூங்கினான் என்று கேட்டபோது அந்தக் கதையையும் சொன்னான்.

''ராமனும் ஜனகன் மகளும் தரையில் அங்கே படுத்திருப்பதைப் பார்த்து எனக்குத் தூக்கமும் வருமா என்று கண்ணீர் சொரிந்து அழுது, இரவு முழுதும் வில்லும் கையுமாக என்னைப் போலவே படுக்காமல் நின்று காத்து வந்தான்'' என்று குகன் சொன்னபோது, பரதன் துயரம் தாங்க முடியாமல் வருந்தினான்.

ராமனும் சீதையும் தரையில் கிடந்த இடத்தை பரதன் பார்த்து மூர்ச்சையடைந்தான். கோசல் தாய்களுக்கு அதைக் காட்டி, ''இதுவே என்பொருட்டு ராமன் தரையில் படுத்த இடம். புல்லும் அமுங்கிக் கிடக்கிறது, பாருங்கள்'' என்றான்.

என்ன உண்டார்கள் என்று கேட்டபோது குகன் சொன்னான் : ''அப்பனே! அன்றிரவு விரதமிருந்து லக்ஷ்மணன் கொண்டு வந்த ஜலத்தை ராமன் அருந்தி மீதியைத் தம்பி



யும் அருந்தினான். நான் இட்ட ஆகாரத்தை அப்படியே திருப்பி விட்டு உபவாசமாகத் தூங்கினார்கள். மறுநாள் காலை தலை மயிரைச் சடையாகத் திரித்துக் கொண்டு காலால் நடந்து சென்றார்கள்'' என்றான்.

ராமனை அயோத்திக்கு எப்படியாவது அழைத்துப் போய் முடிசூட்டுவது என்று தீர்மானித்திருந்ததால் ஓரளவு மகிழ்ச்சியடைந்திருந்த பரதனுடைய உள்ளம் கங்கைக் கரை வனத்தில் குகனுடன் பேசிய பேச்சுக்களாலும் பார்த்த காட்சிகளாலும் மறுபடியும் துயரத்தில் ஆழ்ந்து விட்டது.

''என் பொருட்டு நீ புல்மேல் படுத்தாய். நான் இதைக் கண்டும் உயிருடன் இருக்கிறேன். நான் கிரீடமும் சூட்டிக் கொள்ள வேண்டுமாம்!'' என்றான்.

''எப்படியாவது ராமனைத் திருப்பி அழைத்துப் போய்ச் சிம்மாசனத்தில் அமரச் செய்வேன். வேண்டுமாயின் அவன் கொண்ட பிரதிக்ஞையைப் பதினான்கு வருஷம் நான் அவனுக்குப் பதிலாகக் காட்டிலிருந்து முடிப்பேன். இதில் குற்றமில்லை. சத்தியம் குலையாது. ஒப்புக் கொள்வான்'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு ஆறுதல் அடைந்தான்.

**ம**று நாள் காலை சீக்கிரமாகவே பரதன் சத்ருக்னனை எழுப்பினான். ''என்ன இன்னும் தூங்குகிறாய்? விடிந்து விட்டது. பரிவாரமும் சேனையும் கங்கை தாண்ட வேண்டுமல்லவா? சீக்கிரம் குகனுக்குச் சொல்லி எல்லாம் செய்து முடிக்க வேண்டும்'' என்றான்.

''அண்ணனே! நான் தூங்கவில்லை. எனக்கும் உன்னைப் போலவே இரவெல்லாம் ராமனைப் பற்றிய நினைவுதான்'' என்றான் சத்ருக்னன்.

இப்படிப் பேசும் போதே குகன் வந்து சேர்ந்தான். ''சுகமா? இரவு சரியாகக் கழிந்ததா? உங்களுடைய பரிவார மெல்லாம் சுகமா?'' என்றெல்லாம் கேட்டு, உடனே விடை பெற்றுக் கொண்டு போய், பெரியதொரு படகுப் படை தயார் செய்தான். வெகு விமரிசையாக எல்லாம் நடந்தது. பார மூட்டைகளும், வண்டிகளும், பரதனுடன் வந்த பெரிய சேனையும் படகுகளில் ஏற்றப்பட்டன. கங்கா நதியில் பரதனுடைய பரிவாரம் ஏறிய படகுகளைக் கடத்தினார்கள். அப்போது எழுந்த ஆரவாரம் ஒரு பெரிய திருவிழா போலிருந்தது. பரதனுக்கிருந்த துக்கம் கூட்டத்துக்கு இல்லை. பரதன் எப்போது புறப்பட்டானோ அப்போதே அவர்கள் ராமன் திரும்பி வந்து விடுவான் என்று நிச்சயமாகத் தீர்மானித்துக் கொண்டு விட்டார்கள். ராமன் திரும்பி வந்து பட்டாபிஷேகமும் நடக்கும், தீர்ந்து போன துயரங்களெல்லாம் கனவாக மறையும் என்று எண்ணிச் சந்தோஷமாகச் சென்றார்கள். தற்போது திருவிழாக் காலங்களில் பெரிய ரயிலடியில் நடைபெறும் கோலாகலமாக அன்று கங்கைக் கரையில் நடந்ததைப் போலவே வால்மீகி சித்திரித்திருக்கிறார். சேனை முழுதும் நதியைத் தாண்டியாயிற்று என்று கண்ட பின் பரதனும் தனக்காக அமைத்திருந்த படகில் ஏறிச் சென்றான். கங்கையைக் கடந்து எல்லாரும் பரத்வாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள்.

**ப**ரதனுடைய கதை ஒன்று போதும் ராமாயணம் படித்து நாம் மேம்பட்ட நிலையடைவதற்கு. சக்கரவர்த்தித் திருமகனும் பரதனும் ஆண்டவனுடைய திருவவதாரம் என்றாலும் சரி, இல்லை இவர்கள் வால்மீகி முனிவருடைய கற்பனைச் சிருஷ்டியாகவே இருந்தாலும் சரி, முனிவருக்கு அதற்காகக் கோயில் கட்டித் தலைமுறை தலைமுறையாகப் பூஜிக்கத் தகும். இத்தகைய சிருஷ்டி முனிவருடைய கற்பனையில் உண்டாவதற்கு முனிவர் உள்ளத்தில் எத்தகைய ஞானமும் பக்தியும் இருந்திருக்க வேண்டும்! அது மட்டுமல்ல; அதை நாம் படித்துப் பெரு மகிழ்ச்சியடைகிறோமே அதுவும் நம்முடைய உள்ளத்தில் மறைந்து கிடக்கும் நல்லறிவும் கடவுள் பக்தியுமே. நாமே அறியாமல் பக்தியும் ஞானமும் நாம் பிறக்கும் போதே அடைந்திருக்கிறோம். அது உள்ளே பெருஞ் செல்வமாகக் கிடக்கிறது. இல்லாவிடில் இந்த மக்கள் சமூகம் மிருகக் கூட்டமாகத்தானே இருந்து, நம்மைவிடப் பெரிய மிருகங்களுக்கு இரையாகி அழிந்தும் போயிருப்போம்.

(தொடரும்)



# ஊனம்

“அதெப்படி முடியும்? முன்னே நாங்கதான் முதல்ல பேசினோம். நிச்சய தார்த்தம் பண்ணினோம். இல்லேன்னு சொல்லலே. அதுக்காக இப்ப என்ன பண்ணலாம்கிறீங்க? ஏதாச்சும் நடக்கிற காரியமாய்ப் பேசுங்க. போக வேண்டாத ஊருக்கு வழி சொல்லிட்டு நிக்காதீங்க” என்று அழுத்தம் திருத்தமாய்ப் பேசினாள் பாட்டி.

இன்னமும் இந்த வீட்டில் பாட்டியின் ஆட்சிதான். அதற்கு, எதையுமே சரியாகச் செய்யக்கூடியவள் பாட்டி என்பதே காரணம்.

இப்போது அவள் பேசுவது இங்கு எத்தனை பேரிடம் நிம்மதியை வரவழைத்துத் தந்திருக்கிறது தெரியுமா?

தான் சொன்னதற்கு மாற்று அபிப்ராயங்களோ, மறுத்தல்களோ இருந்து விடக் கூடாது என்பது போல் தெளிவோடும் திடமோடும் பேசிக் கொண்டிருந்தாள்.

அதற்கு, எங்கிருந்தும் மறுப்பு இல்லை.

சௌம்யாவிடமிருந்தும் கூட.

சௌம்யா ஏன் மறுக்கப் போகிறாள்?

இதை அவள் ஒரு வசதி என்று கூடத் திருப்தி அடையலாம்!

முன்பு அவள் கோபிநாத்தை மணப்பதற்கு மறுப்புக் கூறியவள்தானே! ‘இப்ப எனக்கொன்னும் கல்யாணம் எல்லாம் வேணாம். நான் படிக்கணும். மேலே படிக்கணும்...’ என்று சௌம்யா மறுத்த போது, அந்த மறுப்பை முறித்து வீசியவள் பாட்டி தான்.

‘போடி போடி உலகம் புரியாதவளே! இந்த கோபிநாத்தை நீ லேசா எண்ணிட்டே போலிருக்கு. அவனைப் பண்ணிக்க கியூவிலேயே நிக்கிறாளுங்க. ஆனா அவன் என்னடா உன் பின்னாடிதான் வந்து நிப்பேன்னு தபஸ் பண்றானேடி. ஆளும் அம்சமா இருக்கான். வசதியா வேற இருக்கான். பொண்ணைப் பொறந்தவளுக்கு வேற என்னடி வேணும்? இப்ப இதைத் தவற விட்டோம்ன்னா அப்புறம் நாம தரமான மாப்பிள்ளைக்குத் தேடித் தேடி அலையணும். பாட்டி சொல்றதைக் கேட்ட ஒருத்தருமே கெட்டுப் போனதில்லே. சொல்றமில்ல, கேளு...’

பேசாமலிருந்து தனது மறுப்பைக் காண்பித்தாள் சௌம்யா.

உமாகல்யாணி

இதுவரையிலும் எதிர்ச் சொல்லுக்குப் பணிந்தறியாதவள் பாட்டி.

இப்போது பேத்தியின் இடம் பய முறுத்தினாலும் கூட நம்பிக்கையோடுதான் இருந்தாள்.

அது வீண் போகவில்லை.

சௌம்யாவின் கல்யாண நிச்சயதார்த்தம் பாட்டியின் முன்னிலையில் ஜாம் ஜாம் என்று நிறைவேறி விட்டது.

வழக்கம் போலவே பாட்டிக்கு வெற்றி!

எல்லோருக்கும் சந்தோஷம்தான்! பாட்டியைக் கொண்டாடினார்கள், சௌம்யா நீங்கலாக மற்றவர்கள்.

சௌம்யா மட்டும் 'உர்'ரென்று இருந்தாள்.

எல்லாம் சரியாகி விடுவாள் என்று ஒருவர் மற்றவரிடம் ஆறுதலாகக் கூறிக் கொண்டார்கள்.

ஆனால், அவள் அப்படிச் சரியாவாளா, இல்லையா என்பதை அறிந்து ஒரு முடிவுக்கு வரும் முன்பாக, மற்றவர்களே மாற்று முடிவு எடுக்க நேர்ந்த மோசமான விளைவுகள்!

இப்போது எடுக்க வேண்டிய மாற்று முடிவிற்கான பொறுப்பும் வழக்கம் போலவே பாட்டியின் தலைமீதுதான் சுமத்தப்பட்டது.

## சூப்பர்மேனின் சூப்பர் டூப்!

'சூப்பர்மேன்' காமிக் புத்தகத்தில் ஆறு மாதங்களுக்கு முன் சூப்பர்மேன் இறந்து போய் விட்டான்! நாளிதழ்கள் எல்லாம் இதைப் பெரிய செய்தியாக வெளியிட, உலகெங்கும் பரபரப்பாகப் பேசப்பட்டது. அப்புறம்தான் தெரிந்தது இது ஒரு வியாபார தந்திரம் என்று. கடைசியாக வெளியான அந்த காமிக் புத்தகம் எவ்வளவு விற்பனையாயிற்று தெரியுமா? 60 லட்சம் பிரதிகள்! ஆறு மாதங்கள் கழித்து மீண்டும் சூப்பர்மேன் புதுப் பிறவியெடுத்து 'உலவ'த் தயாராகி வருகிறான்!

இன்னொரு சுவாரசியமான கதாபாத்திரம் 'மந்திரவாதி மாண்ட்ரேக்'. 'இளமை' அழியாமல் என்றும் பதினாறாய் இருக்கும் இவனுக்கு இந்தப் பெயர் ஏற்பட்டது எப்படி? மாண்ட்ரேக் என்பது ஒரு மூலிகைச் செடி. இந்தச் செடிக்கு மனிதர்களை என்றும் இளமையாக இருக்கச் செய்யும் சக்தி உண்டு என்று நம்பப்படுகிறது.

- ஆலன்



அதனால்தான் இப்போது பாட்டியின் கத்தல்.

''நாங்க நிச்சயதார்த்தம் பண்ணினதை இல்லேன்னு சொல்லலே. அதுக்கு இப்ப என்ன பண்ணலாம்கிறீங்க? ஏதாச்சும் நடக்கிற காரியமாய்ப் பேசுங்க. போக வேண்டாத ஊருக்கெல்லாம் வழிகாட்டிக்கிட்டு நிற்காதீங்க!''

எதிரில் இருந்தவர்களால் பாட்டியை மறுத்துப் பேச முடியவில்லை.

அவர்கள் இப்போது அவளின் கருணையைத்தான் எதிர்நோக்கினார்கள்.

ஆனால் பாட்டி ஒன்றும் அவர்களின் எதிர்பார்ப்பை நிறைவு செய்கிற மனப்பாங்கில் இல்லை.

முன்பு பாட்டியின் கட்சிக்கு வலுவூட்டியவர்களே இப்போதும் வலுவூட்டிக் கொண்டிருந்தார்கள். முன்பு நிச்சயதார்த்தம் நடத்தச் சொல்லி, இப்போது அதை ரத்து பண்ணச் சொல்லி.

சௌம்யா?

முன்பு எதிர்ப்பைக் காண்பித்த சௌம்யா?

இப்போதும் மௌனமாகவே இருக்கிறாள்.

ஒருவேளை மௌனச் சந்தோஷத்தில் இருப்பாளோ?

நிச்சயதார்த்தம் ரத்தாகி விடும், தான் தனது முந்தைய ஆசைப்படி மேலே படிக்க முடியும் என்கிற சந்தோஷமுடன் இருப்பாளோ?

வெளிப்படையாய் எதுவும் தெரியவில்லை.

''பாட்டி, நாங்க சொல்றதுல அர்த்தமோ, நியாயமோ இல்லைதான். ஆனாலும் எங்க பையனுக்காக...''

பாட்டியின் முகத் தீவிரம் மேலே பேச வேண்டாம் என்று சமிக்ஞை பண்ணியது.

எனினும் வந்தவர்கள் விடுவதாக இல்லை.

''பாட்டி, எதுவுமே நம்ம கையிலே கிடையாது. எல்லாமே ஆண்டவனோட அமைப்புத்தான். நாம எவ்வளவோ ஜாக்கிரதையாய் இருந்தாலும் கூட நடக்கிறது நடந்தேதான் தீரும். இப்ப நீங்க மறுத்துட்டா ரவி ரொம்பவும் மனமுடைஞ்சு போயிருவான். வாழ்வதே அர்த்தமில்லாததாய்ப் போயிடும் அவனுக்கு...''

பயந்து கொண்டே கூறினார் திருமூர்த்தி.

''இங்கே சௌம்யா மட்டும் என்னவாம்? ஏற்கெனவே அவளுக்கு இதுல துளியும் விருப்பம் கிடையாது. நாங்க எல்லாரும் கூடிப் பேசித்தான், அவளை வற்புறுத்தி சம்மதிக்க வச்சோம். அப்பவே அவ மறுப்பைக் காண்பிச்சவ. என்னவோ







நன்றி : கார்டியன்

பெரியவங்க கூடி நிச்சயம் பண்ணியிருக்காங்களேன்னு பேசாம இருந்தா. இப்ப நிச்சயமா அவ ஒத்துக்க மாட்டா. நீங்க வீணாய்ப் போட்டு அலட்டிக்க வேணாம். போய்ட்டு வாங்க.''

அடித்துக் கூறி அனுப்பி வைக்க முயன்றாள் பாட்டி.

ஆனால் அவர்கள் போவதாய் இல்லை.

''பாட்டி, நீங்க மறுக்கிறதை நாங்க தப்புன்னு சொல்லலை. ஆனா, இந்த மறுப்பினாலே ஏற்கெனவே சிதைஞ்சு போயிருக்கிற ரவி இன்னமும் சிதைஞ்சு போயிருவான். அதனாலே நீங்க பெரிய மனசு பண்ணனும். நிச்சயிக்கப்பட்ட திருமணம் நடக்கிறாப்ல ஏற்பாடு பண்ணனும்... ஒரு பையனோட லைஃபை எண்ணியாச்சும் உங்க முடிவை மாத்திக்கணும் பாட்டி.''

''ஒரு பொண்ணோட லைஃபையும் எண்ணிப் பார்க்கணும் நீங்க.''

திருமூர்த்தி பேசவில்லை.

அப்போது இவர்களின் உரையாடல்களையெல்லாம் கேட்டபடி ஓரமாய் நின்றிருந்த சௌம்யா, மெதுவாகத் திருமூர்த்தியின் அருகே வந்து நின்றாள்.

அப்புறம் மிருதுவான குரலில், ''இப்ப அவரை எந்த ஆஸ்பத்திரில அட்மிட் பண்ணியிருக்கீங்க?'' என்று கேட்டாள்.

பாட்டி உட்பட அனைவரும் அவளைத் திடுக்கிடலுடன் ஏறிட்டனர்.

''ஜி. ஹெச்.லதான் அட்மிட் பண்ணியிருக்கு'' என்றார் திருமூர்த்தி.

பாட்டியின் பக்கம் திரும்பிய சௌம்யா, ''பாட்டி, அப்ப நான் அவரைப் பார்த்து ஆறுதல் சொல்லிட்டு வந்துடறேன். பைக் ஆக்ஸிடெண்டிலே கால் போய்ட்டா என்ன, மனசாலே நடக்க முடியும்தானே! அழைச்சிட்டுப் போக நான் இருக்கேன்னு சொல்லிட்டு வந்துடறேன்'' என்றவள், விருட்டென்று படி இறங்கி விரையலானாள்.

அத்தனை பேரும் முடமாகி முடங்கிக் கிடக்க, அவள் மட்டும் கால்களை வீசிப் போட்டு நடக்கலானாள்.





# இந்த காந்தி

“என்னை மன்னிச்சிடுங்க!” என்று புருஷன் காலில் விழும் பெண்களையே கதாபாத்திரங்களாகப் படைத்து வந்த தமிழ் சினிமா இயக்குனர்களின் இடையே சந்தேகப்படும் கணவனை ஒதுக்கி, முன்னேறும் புதுமைப் பெண்ணைக் காட்டிய பாரதிராஜா இன்று தனித்து, உயர்ந்து நிற்கிறார்.

நீள, நீளமான இலக்கண சுத்த வாக்கியங்கள் எழுதிய கதாசிரியர்களிடையே, அவசர வாக்கியங்களில் அர்த்தத்தைப் புதைத்துத் தந்த சுஜாதா வேறுபட்டு நிற்கிறார்.

விஷயம் இதுதான்! உங்கள் செய்கைகள், முயற்சிகள் எத்தனைதான் சிறப்பாக இருக்கட்டும் - அதனை வெளிப்படுத்தும் விதத்தில், உங்கள் தனித்துவம் அறிந்து செயல்படுத்துங்கள்! எத்தனைக்கெத்தனை நம்மை 'வித்தியாசமாக'க் காட்டிக் கொள்கிறோமோ - அது நமது வெற்றியின் 'முன் ரசீதாக' நாமே நமக்கு அளித்துக் கொள்வது!

வழக்கம் போல் ஒரு உண்மைக் கதை. காந்தி கண்ணதாசன் என்கிற பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? கவிஞர் கண்ணதாசனின் மகன். இன்றைய 'கண்ணதாசன் பதிப்பக' அதிபர்.

ஆரம்ப காலத்தில் சட்டம் பயில ஆசைப்பட்டு, வெற்றிகரமாகத் தேறி, பின்னால் பதிப்பகத் துறையையே தன் வாழ்க்கையாகத் தேர்ந்து, தெளிந்த இளைஞர்.

அப்போது கவிஞர் கண்ணதாசன் திரையுலகின் உச்சாணிக் கொம்பில் உட்கார்ந்திருந்த நேரம். அவர் 'அ.ஆ.இ.ஈ' எழுதினாலும் அது எடுபட்டது! அவரது நூல்களுக்கு அமோக ஆதரவு!

மிகச் சிறிய வயதிலேயே ஏதேனும் சாதிக்கும் ஆர்வம், தன்னை நூறு பேருக்கு நடுவிலும் தனித்துக் காட்டிக் கொள்ள வேண்டும் என்கிற உத்வேகம் கொண்ட காந்தி, தமது முயற்சிகளின் முதல்படியாகத் தம் தந்தையின் நூல்களைப் பதிப்பித்து வெளியிட ஆரம்பித்தார். தரமான பதிப்புதான். நல்ல பெயர் கிடைத்தது. ஆனாலும் என்ன சொன்னார்கள்?

“சொந்தத் திறமை ஏதும் இல்லை. தந்தையின் படைப்புகள்தான் இவரை வாழ வைக்கின்றன.”

யோசித்துப் பாருங்கள். இப்படி ஒரு 'கமெண்ட்' - கேட்கும் இடமிருந்தெல்லாம் வந்தால், பதிப்பகமாவது, ஒண்ணாவது என்று ஊரைப் பார்க்க ஓடிப் போகவல்லவா தோன்றும்!

ஆனால் காந்தி அப்படிச் செய்யவில்லை. யோசித்தார். அப்பாவின் பெருமை அவருக்கு. 'அவரைப் போல நாமும் சுயமாகப் புகழ் பெறுவதுதானே அவருக்குப் பெருமை?'

முன்னேற என்ன செய்யலாம் என்கிற பலமான யோசனை. ஏதாவது செய்தே தீர வேண்டுமென்கிற வெறி.

**நில்,**

**கவனி,**

**வெற்றி கொள்!**

# வித்தியாசமானவர்!

ஆனாலும் தமது முயற்சிகளெல்லாம் பதிப்பகத் துறையில்தான் என்கிற உறுதி.

அப்போது ஏனைய பதிப்பு நிறுவனங்களெல்லாம் ஏறக்குறைய ஒரே மாதிரியாக, சமையல் குறிப்புகள், அழகுக் குறிப்புகள் என்பதாகச் சகட்டுமேனிக்கு நூல்கள் வெளியிட்டுக் கொண்டிருந்த நேரம்.

காந்தி, துணிந்து ஒரு முடிவு எடுத்தார். பிரபலமான ஆங்கில நூல்கள் பலவற்றைத் தமிழில் வெளியிடும் உரிமையை வாங்கினார். புலமைமிக்க மொழிபெயர்ப்பாளர்களைக் கொண்டு, தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். அவரது தந்தையின் நூல்களைப் போலவே அவற்றிற்கும் நல்ல வரவேற்பு. குஷ்வந்த் சிங் ஜோக்ஸ். எம். ஆர். காப்மேயரின் சுயமுன்னேற்ற நூல்கள். பகவான் ரஜனீஷ் பற்றிய நூல்கள், அவரது பிரசங்கத் தொகுப்புகள் - இன்னும் இதுபோன்ற ஏராள நூதன வெளியீடுகள்.

புதிய புத்தகங்களின் அறிமுகம், மக்கள் ரசனையில் புதிய மாற்றங்களைக் கொண்டு வர, விற்பனை பிய்த்துக் கொண்டு பறந்தது! நாலாபுறமிருந்தும் பாராட்டு!

**வ**ளர்ச்சி ஒருபுறமிருப்பினும், மற்ற துறைகளைப் போலவே இதிலும் பிரச்னைகள் இல்லாமல் இல்லை. ஆனால் காந்தி சந்தித்த பிரச்னைகள் முற்றிலும் மாறுபட்டவை.

சாதாரணமாக ஒரு நூல் வெளியீட்டாளரின் 'சொர்க்க வாசல்' என்று சொல்லத்தக்கது 'லைப்ரரி ஆர்டர்'தான். ஆனால் காந்தியின் நூல்களுக்கு ஆர்டர் இல்லை! காரணம் அவரது சமீப வெளியீடுகள்; 'மொழிபெயர்ப்பு' என்பதுதான்!

ஆனால் -

காந்தியின் சித்தாந்தம் - 'ஒரு வாசல் மூடினால் மறுவாசல் திறக்கும்' என்பது!

சில இதழ்களில் தம் வெளியீடுகள் குறித்த விளம்பரம் செய்தார். சரியான முறையில் அது மக்களைச் சென்றடைந்ததுதான் 'நேரம்'! விளைவு - லைப்ரரி ஆர்டரை விடவும் அதிகமான, அமோகமான விற்பனை! ஒரே வருடத்தில் மூன்று, நான்கு பதிப்புகள் (காப்மேயர் நூல்கள்) விற்றுத் தீர்ந்திருக்கின்றன!

**பி**ரச்னைகளே இல்லாத வாழ்வை வேண்டுவதைக் காட்டிலும், அதைச் சமாளிக்கும் மனோபாவத்தை வளர்த்துக் கொள்வதுதான் சிறந்தது என்பது காந்தியின் கொள்கை.

சமீபத்தில் ஏற்பட்ட புத்தகக் கண்காட்சி தீ விபத்தில் இவருக்குக் கிட்டத்தட்ட 85 ஆயிரம் நஷ்டம். எந்தச் சாமானியனும் தலையில் கைவைத்து உட்கார்ந்து விடக்கூடிய மகத்தான சோகம். ஆனால் காந்தி என்ன சொல்கிறார்?

''என்னை விடவும் அதிக நஷ்டம் அடைந்த ஒரு பதிப்பாளரை அங்கு சந்தித்தேன். 'என்ன சார்! இப்படி ஆகிவிட்டதே!' என்றேன். அவர் ஒரே வார்த்தை சொன்னார் : 'So what?' - அந்த வார்த்தை எனக்கு ஆயிரமாயிரம் அர்த்தங்களை உணர்த்தியது. இது ஒரு பெரிய விஷயமே அல்ல. விரைவில் இந்த இழப்பிலிருந்து மீண்டெழுவேன் என்று உறுதி கொண்டேன். முன்னிலும் கடுமையாக உழைத்தேன். இதோ, எழுந்து விட்டேன்!''

**இ**ன்று தமிழக முன்னணிப் பதிப்பகங்களிலேயே நான்காவது இடத்தைப் பெற்றுள்ளது, காந்தியின் 'கண்ணதாசன் பதிப்பகம்'.

உங்கள் முயற்சி எப்போதும் பிறரிடமிருந்து மாறுபட்டு, வித்தியாசமானதாக இருக்கட்டும். அதுவே பாதி வெற்றி அடைந்தது போலத்தான்!

- வெ. ஸ்ரீதர்

படம் : கோபிநாத்










பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

அறிமுகப்படுத்துகிறோம்! gala
தமிழகமெங்கும்.

# எத்தனை இன்பம்... இயற்கையின் சுவை!

## பல விதக் கனிகளின் நறுமணம், சுவையுடன்.

ஜாம் :
- பைனாப்பிள் • ஸ்ட்ராபெர்ரி
- மாங்கனி • பல்வேறு கனிகள்

ஸ்க்வாஷ் :
- ஆரஞ்சு • மாங்கனி
- எலுமிச்சை

க்ரஷ்:
- பைனாப்பிள் • திராட்சை
- ஸ்ட்ராபெர்ரி

ஸாஸ்:
- தக்காளி • பூண்டு
- மிளகாய்

gala
TOMATO SAUCE
ORANGE SQUASH
INEAPPLE CRUSH

gala
கருத்துடன் தேர்ந்தெடுத்த
கனிகளின் அளிப்பு!
என்ன சுவை...... எத்தனை வகை.



தயாரிப்பாளர்கள் :
கர்னாடகா அக்ரோ இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பொரேஷன் லிமிடெட்
பெங்களூர் - 560 024.

MSIL
விற்பனையாளர்கள் :
மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்,
பெங்களூர் - 560 052.

Ak Bg/KAIC/1 Tam.